KALKI 20.3.94 ரூ. 3.00

# கல்கி

## அமைதியை வலியுறுத்தும் துப்பாக்கிப் பயிற்சி!



# உங்கள் குழந்தை நோயை எதிர்த்துப் போராட சமவிகித ஊட்டச்சத்து அவசியம் தேவை.

<u>வைட்டமின்களும் மினரல்களும்</u> சரியான சம அளவில் கலந்து ஊட்டச் சத்தைக் கிரகிக்க உதவுகின்றன. ஊட்டச்சத்தினால் குழந்தையின் நோய் எதிர்ப்பு ஆற்றல் வளர்கிறது. இது நிரூபிக்கப்பட்ட உண்மை.

<u>ஊட்டச்சத்துக்கள் சமவிகிதத்தில்</u> கலந்துள்ள உணவின் மூலம்தான் இந்த வைட்டமின்களையும் மினரல்களையும் பெற முடியும். உங்கள் டாக்டரிடம் கேளுங்கள் அவர் சொல்வார் : உங்கள் குழந்தைக்கு <u>4 மாதங்கள் ஆனபிறகு</u> பால் மட்டுமே போதாது. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வாரமும் உங்கள் குழந்தைக்கு ஊட்டச்சத்துக்கள் சமவிகிதத்தில் கலந்துள்ள திட உணவைக் கொடுக்க வேண்டும்.

எனவேதான் தாய்மார்கள் <u>ஸெரிலாக்</u> நாடுகின்றனர். ஊட்டச் சத்துக்கள் சமவிகிதத்தில் கலந்த திட உணவான ஸெரிலாக்கில், புரோட்டீன்கள் நிறைந்த பாலும் கோதுமையும் உள்ளன. மேலும், கொழுப்புச் சத்துக்கள், கார்போஹைடிரேட்ஸ், இரும்புச் சத்து, கால்ஷியம் ஆகிய சத்துக்கள் சரியான அளவில் கலந்த உணவு ஸெரிலாக். வைட்டமின்கள் A, D, E, B காம்ப்ளெக்ஸ் மற்றும் C இதற்குப் பலம் சேர்க்கின்றன.

இன்னுமொரு சிறப்பு, ஸெரிலாக் இப்போது நெஸ்லேயின் புரட்சிகரமான <u>புதிய Z-லைன் என்ஸைமேட்டிக்</u> முறைப்படி தயாரிக்கப்படுகிறது. இதனால், தானியங்கள் எளிதில் ஜீரணமாவதற்காக முன்கூட்டியே பக்குவப் படுத்தப்படுகின்றன. ஸெரிலாக் மிக எளிதில் ஜீரணமாகி விடுகிறது. மிருதுவாகவும், சுவையாகவும் இருக்கிறது.

எனவே, உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதும் ஸெரிலாக் கொடுங்கள். ஏனென்றால், இதில் சரியான வைட்டமின்களும் மினரல்களும் உள்ளன. ஏனென்றால், உங்கள் குழந்தை ஆரோக்கியமாக இருப்பதற்குத் தேவையான ஊட்டச்சத்துக்கள் சமவிகிதத்தில் கலந்த திட உணவு இதுவே.




**உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்**



# பாரதியார் நினைவு இல்லம் பார்க்கப் போனால் பரிதாபம்!

'ஆமை புகுந்த வீடும் அமீனா புகுந்த வீடும் உருப்படாது' என்பார்கள். கூடவே, இனி 'அரசாங்கம் புகுந்த வீடு' என்பதையும் தைரியமாகச் சேர்த்துக் கொள்ளலாம். உதாரணத்திற்குச் சென்னை - திருவல்லிக்கேணியிலுள்ள பாரதியார் நினைவு இல்லம். அங்கு ஆரம்பமே தகராறுதான்!

அட, பாரதியார் வசித்த வீட்டைப் பார்ப்பதும் அவர் கால் பட்ட அந்த அறைக்குள் நமது கால்கள் படுவதும் நிச்சயமாகப் பரவசமூட்டும் ஓர் அனுபவம் தான். என்றாலும் அந்த அனுபவத்துக்காக எத்தனை பேரால் அலுவலகங்களுக்கு லீவு போட்டு விட்டு அலைய முடியுமென்று அரசாங்கம் கருதுகிறதோ தெரியவில்லை. சனி, ஞாயிறு ஆகிய இரண்டு தினங்களும் சப்ஜாடாக விடுமுறை விட்டு விடுகிறார்கள். மற்றும் வருகிற அரசு விடுமுறைகளும் அங்கே விடுமுறைகள் தான்!

சரி, இதையும் தாண்டி ஒருவர் செல்ல வேண்டுமானாலும் காலை பத்து மணி முதல் மாலை ஐந்து மணிக்குள் சென்று பார்த்துவிட வேண்டும். அந்த நேரங்களில்தான் திறந்திருக்கும். அப்படியும் ஒருவர் போய், பாரதியாரைப் பற்றிய விவரங்கள் ஏதாவது கேட்கலாமென்றால் ஒருவரும் அங்கே அகப்பட மாட்டார்கள். நாம் சென்றிருந்தபோது கூட, 'அங்கே இருந்து என்ன செய்யப் போறே? இங்கே வாயேன்!' என்று அங்கிருக்கும் 'கேர்டேக் கரை' கோட்டையிலுள்ளவர்கள் கூப்பிட்டுக் கொண்டதாகத்தான் சொன்னார்கள்.

மேலும், பாரதியார் பற்றிய புகைப் படங்கள், கையெழுத்துப் பிரதிகளின் நகல் படங்கள் ஆகியவை சிறப்பாக வைக்கப்பட்டிருந்தாலும் எல்லாவற்றுக்கும் விளக்கக் குறிப்புகள் எழுதப்பட்டிருந்தாலும் ராஜாஜியின் படத்துக்கு மாத்திரம் எந்தவிதமான குறிப்பும் இல்லாமல் இருப்பது ஏன்? ஒரு வேளை திருஷ்டிப் பரிகாரமோ என்று நினைக்கத் தோன்றுகிறது!

அப்புறம் பாரதி பற்றிக் கொஞ்சம் விஷயம் தெரிந்தவர்களுக்கு ஏற்படும் சந்தேகம். பாரதியார் புதுவைக்குச் சென்று பிரிட்டிஷார் பார்வையில் படாமல் தலைமறைவாக வாழ வேண்டிய ஒரு நிலை ஏற்படும் வரையிலும், பிறகு புதுவையில் பத்தாண்டுகள் வசித்த பிறகு மீண்டும் சென்னை திரும்பிய போதும் இதே இல்லத்தில்தான் வசித்தாரா? அல்லது புதுவைக்குச் செல்லுமுன் வேறு இல்லம் ஏதாவதொன்றில் வசித்தாரா? இது போன்ற கேள்விகளுக்குத் துளியும் அங்கே விளக்கம் இல்லை.

பாரதியார் இந்த இல்லத்தில் வசித்த போது, அப்போது அங்கே மொத்தம் பதின்மூன்று ஒண்டுக் குடித்தனங்கள் இருந்ததாகவும் அவைகளில் ஒன்றுதான் பாரதியின் குடும்பம் என்றும் சொல்லப்படுகிறது.

ஆனால் இப்போதிருக்கிற நினைவு இல்லத்தைப் போய்ப் பார்க்கும் யாருக்கும் பாரதி ஒரு ஜமீன்தார் போல் வாழ்க்கை நடத்தியிருக்கிறார் என்றுதான் தோன்றுமே தவிர, அவர் ஒண்டுக் குடித்தனத்தின் ஏழைமையில் வசித்ததாக எண்ணவே முடியாது.

ஆக, ஓர் இல்லத்தை நினைவு இல்லமாகச் செய்வதற்கு அதை அரசு விலை கொடுத்து வாங்கி, ஏதோ பாரதியாரையே புரட்சித் தலைவிதான் தமிழகத்துக்குக் கண்டுபிடித்துக் கொடுத்ததுபோல ஜெயலலிதாவின் படங்கள் இரண்டைப் பெரிதாக வைத்துவிட்டால் மட்டும் போதாது. நினைவு இல்லத்தை மக்கள் போய்ப் பார்க்கும்படியான நாட்களில் திறந்து வைக்க வேண்டும். பாரதியார் பற்றி முழுமையாகத் தெரிந்தவர்களைத் தேடிக் கண்டுபிடித்து விவரங்கள் சேகரித்து, பிறகு அவற்றைச் சரிபார்த்துப் பொதுமக்களுக்குக் கிடைக்கும்படி செய்ய வேண்டும். இல்லையென்றால், சனி, ஞாயிறு மாதிரி மற்ற நாட்களிலும் அதை மூடியே வைத்துவிடலாம். அதனால் ஒன்றும் குடிமுழுகிவிடாது.

- ப்ரியன்

படம் : கோபிநாத்

# அமைதியை வலியுறுத்தும் துப்பாக்கிப் பயிற்சி!

ஐந்தரைக் கிலோ எடையுள்ள துப்பாக்கியை நம்மிடம் நகர்த்தி, ''இதைக் கொஞ்சம் உங்கள் தோள் வரை உயர்த்திப் பிடித்துப் பாருங்கள்!'' என்றார் ரூபா உன்னி கிருஷ்ணன்.

இரண்டு நிமிடங்கள் அதைக் கையில் தாங்கிக் குறி பார்ப்பதற்குள்-

''சிரமமாகத்தான் இருக்கிறது!'' என்று ஒப்புக் கொண்டோம்.

துப்பாக்கி சுடும் போட்டியில், தேசிய அளவிலும், மாநில அளவிலும் டஜன் கணக்கில் வெள்ளியும், தங்கமுமாகப் பதக்கங்களை வாங்கிக் குவித்திருக்கிறார் ரூபா உன்னி கிருஷ்ணன். எத்திராஜில் எம்.ஏ. இரண்டாம் வருட மாணவி.

''எல்லா விளையாட்டுக்களையும் விட்டுவிட்டு, அப்படி என்னதான் இருக்கிறது என்று துப்பாக்கியைக் கையில் தூக்கினீர்கள்?''



''என் அப்பா போலீஸ் உயர் அதிகாரியாய் இருந்த போது, இன்ஸ்பெக்ஷன் கேம்ப் போவார். எனக்குப் பன்னிரண்டு வயதாக இருக்கும் போது, எங்கள் குடும்பமே அப்பாவுடன் ஒரு கேம்புக்குப் போக நேர்ந்தது. அப்போது துப்பாக்கி சுடும் பயிற்சி அங்கே நடந்து கொண்டிருந்தது. நானும் விளையாட்டாக அவர்களிடமிருந்து துப்பாக்கியை வாங்கி ஷூட் பண்ணினேன். பெரும்பாலும் குறி தப்பாமல் என் குண்டுகள் பாய்ந்தன. இதுதான் ஆரம்பம். அப்பா சப்போர்ட் பண்ணினார். அவரது அங்கத்தினர் பதவியைப் பயன்படுத்தி, மெட்ராஸ் ரைஃபிள் கிளப்பில் ஜூனியர் மெம்பராக ஆனேன்...''

86,87,88,89ஆம் வருடங்களில் தொடர்ந்து தேசிய

* மீனாட்சி ராமநாதன்
- சுவாசப் பயிற்சி

ஷூட்டிங் பந்தயங்களில் பங்கெடுத்துக் கொண்டு வெள்ளி-தங்கப் பதக்கங்களைத் தட்டிக் கொண்டு வந்தார் ரூபா.

90ல் மாஸ்கோவில் 45ஆவது உலக ஷூட்டிங் பந்தயம்; 11ஆவது ஏஷியன் கேம்ஸ், மறுபடி SAF கேம்ஸ்களில் ஸ்ரீலங்காவிலும், டாக்காவிலும் பரிசுகள். இடையில் பீஜிங்கில், இந்தியாவின் பிரதிநிதியாக. சியோல் ஒலிம்பிக்கில் மறுபடி. சமீபத்தில் பூனாவிலும், சென்னையிலும் மறுபடி தங்கப் பதக்கங்கள்!

''மற்ற ஸ்போர்ட்ஸ்களிலாவது உடற்பயிற்சி ஒரு முக்கிய அம்சமாக இருக்கிறது. இதில் அப்படி என்னதான் இருக்கிறது?''

''துப்பாக்கியைத் தூக்கிப் பார்த்தீர்கள் அல்லவா? ஐந்தரைக் கிலோ. போட்டி நடைபெறும் ஒன்றே முக்கால் மணி நேரமும் அதைக் கையில் வைத்துக் கொண்டு இருக்க வேண்டுமானால் உடம்பில் சக்தி நிறைய வேண்டும். வழக்கமான உடற்பயிற்சியோடு, மூச்சை இழுத்து விட்டுப் பயிற்சி செய்ய வேண்டும். கழுத்துக்குப் பயிற்சி தர வேண்டும். ரன்னிங், ஜாகிங் எல்லாம் செய்தால்தான் உடம்பு ட்ரிம்மாக இருக்கும்; ஸ்டாமினா இருக்கும். எல்லாவற்றுக்கும் மேலாக வில் பவர் வேண்டும். கான்ஸன்ட்ரேஷன் மிக மிக அவசியம். சுடுகிற சமயத்தில் ஒரு மூச்சு கூடுதலாகப் போனால் கூடக் குறி தவறிவிடும்! அதனால் ப்ரீதிங் கன்ட்ரோல் அவசியம். கால் தசைகளும், முதுகுப் புறத் தசைகளும் திடமாக இருக்க வேண்டும்.''

✱ சுடுவதில் மூன்று வித நிலைகளுள் ஒன்று...

**மா**நில அளவிலும், தேசிய அளவிலும் தமிழ் நாட்டின் பிரதிநிதியாகப் பங்கெடுத்துக்கொண்டு சில பல மெடல்களையும் ஷீல்டுகளையும் தட்டிக் கொண்டு வந்திருக்கும் மீனாட்சி ராமனாதனைச் சந்தித்த போதும், மேற்கண்ட உடற்பயிற்சிகளைத் தினசரி செய்வதாகச் சொன்னார்.

''மூச்சுப் பயிற்சியினால் மனம் அமைதியுற்று, ஒருமுகப்பட்டு எண்ணமும் பார்வையும் ஒரு சேரக் குவியும்!'' என்றார்.

''உங்களுக்கு எப்படி இந்த விளையாட்டில் ஆர்வம் ஏற்பட்டது, மீனாட்சி?''

''அப்பா என்.சி.சி.யில் இருந்தவர். மெட்ராஸ் ரைஃபிள் கிளப் மெம்பர். 91ல் ஒருநாள் ஷூட்டிங் ரேஞ்சுக்குக் கூட்டிக் கொண்டு போனார். எழும்பூரில் போலீஸ் கமிஷனர் ஆபீஸ் வளாகத்தில் இருக்கிறது, ஷூட்டிங் ரேஞ்ச். உறுப்பினர் ஆவது சுலபமல்ல. ஏற்கெனவே அங்கத்தினராக இருக்கும் ஒருவர், நம்பெயரை ப்ரபோஸ் பண்ண வேண்டும். அதை கமிட்டி ஏற்க வேண்டும். பிறகு அங்கத்தினர் விண்ணப்பம் தருவார்கள். பூர்த்தி

செய்து கொடுத்த பிறகு, போலீஸ் வெரிஃபிகேஷன். பிறகு இன்டர்வியூ. இதில் தேர்ந்தெடுக்கப்பட்டால்தான் உறுப்பினராக முடியும்!''

கோச் அல்லது பயிற்சியாளரின் உதவி முக்கியமானது. அவர்தான் எப்படி கான்ஸன்ட்ரேட் செய்வது, எப்படி மூச்சுவிடுவது, எப்படி ஷூட் பண்ணுவது என்று பயிற்சி தருகிறார்.

''சல்வார், கமீஸ், அல்லது சாரி உடுத்திக் கொண்டு ஷூட் செய்ய முடியாது. அதற்கென்று இருக்கும் பிரத்யேக உடையான கான்வாஸ் பான்ட்டும், பிடிப்பான லெதர் கோட்டும் அணிந்துதான் சுட வேண்டும். பந்தயத்துக்கு முன்னால் டயட் கன்ட்ரோல் கூட அவசியம்!''

சுடுவதில் மூன்று நிலைகள் இருக்கின்றன.

● ப்ரோன் பொஸிஷன் (படுத்த படி)

● ஸ்டான்டிங் பொஸிஷன் (நின்ற வாறு)

● நீலிங் பொஸிஷன் (மண்டி யிட்டு)

ஐம்பது மீட்டர் தொலைவி லிருந்து, நெற்றிப் பொட்டு அளவே யான குறியை நோக்கிச் சுடுவதற்குக் கட்டாயம் பயிற்சி வேண்டும். மையப் புள்ளியைச் சுற்றி வெளியே ஒன்றை யொன்று அடுத்து ஒன்பது வளை யங்கள் இருக்கின்றன.

மையப்புள்ளியில் குறி தாக்கினால் பத்து பாயின்ட். அதற்கடுத்த வளை யத்தைத் தொட்டால் ஒன்பது. அடுத்த வளையம் எட்டு. கடைசி வளையம் ஒன்று. இப்படி அறுபது முறை குறி பார்த்துச் சுட வேண்டும்; இது ஒரு மாட்ச். மொத்தம் 600 பாயின்டுகள்.

சுட்ட பிறகு, உடனே அருகி லிருக்கும் டெலஸ்கோப்பு வழியாகப் பார்த்து, தாங்கள் மையப் புள்ளியில் தான் சுட்டோமா என்று உறுதி செய்து கொள்ளுகிறார்கள்.

துப்பாக்கிகளில் இரண்டு வகைகள் இருக்கின்றன. ஒன்று ஏர்-ரைஃபிள். மற்றது ஸ்டாண்டர்ட் ரைஃபிள். ரவை சுயத்தால் ஆனது. ஜெர்மனியில் தயாராகும் இந்தத் துப்பாக்கிகள், சுமார் 20,000ரூபாய் முதல் 40,000 ரூபாய் வரை ஆகிறது. அதாவது கஸ்டம்ஸ் ட்யூட்டி






## ஸ்ரீரங்கம், சமயபுரம், திருவானைக்கோவில் சிறப்பிதழ்

சேர்த்து. ரொம்ப காஸ்ட்லி ஸ்போர்ட்ஸ்தான்! லைசன்ஸ் அவசியம் தேவை.

**கோ**வையில் நடந்த மாநிலப் பந்தயத்தில் 528 பாயின்ட்டுகள் எடுத்த மீனாட்சி ராமநாதன், பூனாவில் நடந்த தேசியப் போட்டியில் 563 பாயின்டுகள் எடுத்து ஜூனியர் கோல்டு மெடல் பெற்றார்.

ரூபா மூன்று பொஸிஷன் களிலும் 565 பாயின்டுகள் எடுத்துத் தங்கப் பதக்கம் பெற்றவர். 584 பாயின்ட்டுகள் எடுத்து ரெக்கார்டு முறியடித்தவர். 85ல் டாக்காவில் இரண்டு தங்கப் பதக்கங்கள் பெற்றவர்.

பம்பாயில் நடந்த நேஷனல் கேம்ஸில் ரூபா, மாலதி டேவிட், மீனாட்சி ராமநாதன் மூவருமே ஒரு டீமாக விளையாடி வெள்ளிப் பதக்கம் பெற்றார்கள்.

மொத்தத்தில் இருவரிடமும் இருக்கும் தங்க, வெள்ளி மெடல்களைப் பார்த்தால் தலை சுற்றுகிறது!

இருவருக்குமே ஏ. ஜே. ஜவாஹரீன் என்பவர்தான் கோச். டார்கெட் கன்ட்ரோலில் இவர் இன்டர்நேஷனல் ஜூரி.

ரூபாவும் சரி, மீனாட்சியும் சரி, ஒலிம்பிக்ஸில் இந்தியப் பிரதிநிதிகளாக விளையாட வேண்டும் என்ற லட்சியம் உள்ளவர்கள்.

ரூபா ஐ.ஏ.எஸ். தேர்வு எழுதப் போகிறாராம், எம்.ஏ.முடித்ததும். (ஆங்கிலக் கவிதைகளும் எழுது கிறார்!)

மீனாட்சி, எம்.ஏ.தொடருவா ராம்.

''ஷூட்டிங்?''

''கட்டாயம் தொடருவோம்!''

பேட்டி கட்டுரை: சாருகேசி

அட்டையில்:
ரூபா உன்னிகிருஷ்ணன்

அட்டை வண்ணப்படமும், படங்களும்: கோபிநாத்



# போர் உருவாக்கும் அனாதைகள்; அன்பு தோற்றுவிக்கும் அன்னைகள்!

**SOS – 'உதவுங்கள், அவசரம்!' என்று பொருள். இந்தப் பெயருடன் செயல்படும் நிறுவனம் உலகெங்கும் ஏராள SOS கிராமங்கள் அமைத்து அருமையான பணி செய்து வருகிறது.**

உலகெங்கும் எத்தனையோ ஆயிரக் கணக்கான குழந்தைகளுக்கு அன்னையின் பாசமும், அன்பும் மறுக்கப்பட்டு, அவர்கள் அனாதைகளாகி, பசித்த வயிற்றோடு படுக்கப் போகும் நிலைமை இருக்கிறது.

வறுமை மட்டுமா இதற்குக் காரணம்?

''அல்ல!'' என்கிறார் ஹெல்முட் குடின். ''அரசியல் மாறுதல்களால் பல நாடுகளில் பிரிவு. போர்களால் பல குடும்பங்கள் நாசம். பூகம்பத்தாலும், மதக் கலவரங்களாலும் பல குழந்தைகள் அகதிகள் ஆகிறார்கள். தீவிரவாதிகளால் பெற்றோரை இழந்த குழந்தைகளும் ஏராளம்!''

● சியோலில் எஸ்.ஓ.எஸ். குழந்தைகள்

ஹெல்முட் குடின் ஆஸ்திரியாக்காரர். எஸ்.ஓ.எஸ். சில்ட்ரன்ஸ் வில்லேஜ் என்ற அனாதைக் குழந்தைகளின் கிராமங்களை உலகம் முழுக்க நடத்தி வரும் தலைவர்.

அன்புக்கும், பாசத்துக்கும் ஏங்கும் குழந்தைப் பருவ ஏக்கம், குடின் அனுபவித்ததுதான். ஒருவர் பின் ஒருவராக அம்மாவையும், சகோதரியையும் இழந்து, அரசியல் நிலைமையில் ஏற்பட்ட மாற்றம் காரணமாகத் தகப்பனாரின் குடியுரிமையும் பறிபோக, தந்தையிடமிருந்து பிரிக்கப்பட்டு, ஒரு எஸ்.ஓ.எஸ். கிராமத்தில் வளர்ந்தவர்தான் குடின். படித்துத் தேறி, கற்றுலாத் துறையில் பட்டம் பெற்றாலும், அந்தத் தொழிலை மேற்கொள்ளவில்லை. காரணம், இந்த எஸ்.ஓ.எஸ். அமைப்பை உருவாக்கியவர் இவர் மீது வைத்த மதிப்பும், நம்பிக்கையும்தான்.

சென்னைக்கு வந்த குடின், 'கல்கி'க்குத் தனிப் பேட்டி அளித்தார்.


✱ ஹெல்முட் குடின்

● **எங்கள் முதலமைச்சரைப் போய்ப் பார்த்தீர்களா?**

''ஆகா, பார்த்தேன். சேலத்துத் தொட்டில் குழந்தைகளை எஸ்.ஓ.எஸ். குழந்தைகள் கிராமத்துக்கு அன்பளிப்பாகக் கொடுத்தார்.''

● **எஸ். ஓ. எஸ். சில்ட்ரன்ஸ் வில்லேஜ் அமைப்பை உருவாக்கியவர் யார்?**

''இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு, ஐரோப்பாவின் அழிவிலும், சிதைவிலும் அநாதைகளாக அலைந்து திரிந்து கொண்டிருந்த ஏராளமான குழந்தைகளைக் கண்டு மனம் நொந்து, வருந்திய டாக்டர் ஹெர்மன் மீனர்தான் இதன் ஸ்தாபகர். பல குழந்தைகளை இவர் தமது வீட்டுக்கே அழைத்து வந்து பாசத்துடன் வளர்த்தார். அதில் கிடைத்த அனுபவமும், ஆறுதலும்தான் எஸ்.ஓ.எஸ். சில்ட்ரன்ஸ் வில்லேஜ்கள் உருவாகக் காரணம்.''



● **அநாதை இல்லங்களுக்கும் இதற்கும் என்ன வேறுபாடு?**

''சேவை மனப்பான்மை கொண்ட, திருமணம் ஆகாத, அல்லது கணவனை இழந்த பெண்கள் இங்கே இந்தக் குழந்தைகளுக்கு அம்மாவாக இருக்கிறார்கள். சமைத்துப் போடுகிறார்கள். ஒவ்வொரு வீட்டிலும் 8-10 குழந்தைகள் என்று ஒரு கிராமத்தில் சுமார் 15 வீடுகள். தான் அநாதை ஆகிவிடவில்லை, தன்னைப் பாசத்துடன் வளர்க்க அம்மாவும், சகோதர சகோதரிகளாக மற்ற குழந்தைகளும் இருக்கிற உணர்வை இங்கே வளர்க்கிறோம். எல்லோரையும் போல இவர்களும் படிக்கிறார்கள். மருத்துவம், இஞ்சினியரிங், ஐ.டி.ஐ. என்று மேற்படிப்பும் படித்துத் தேறுகிறார்கள். வளர்ந்து விட்டால், திருமண வாய்ப்பு வரும்போது திருமணமும் செய்து கொள்ளுகிறார்கள். சாரதா, அனிதா என்ற இரண்டு பெண்களுக்கு நடனக் கலையில் ஆர்வம் அதிகம். இருவருமே கலா க்ஷேத்திராவில் பயின்று வருகிறார்கள்!''

● **எத்தனை நாடுகளில் எஸ்.ஓ.எஸ். வில்லேஜ்கள் இருக்கின்றன?**

''120 நாடுகளில் , மொத்தம் 220 கிராமங்கள். ஆனால் சமீபத்திய கிழக்கு ஐரோப்பிய விளைவுகளுக்குப் பிறகு, சொல்ல முடியாத அளவுக்குச் சவால்கள். யுகோஸ்லாவியா, ருமேனியா தவிர, பல ஆப்பிரிக்க நாடுகளிலும் குழந்தைகளின் பரிதவிப்பு அதிகரித்து வருகிறது. ரஷ்யாவில் கூட, செர்னோபில் அணு ஆலை விபத்துக்குப் பின் அகதிக் குழந்தைகளுக்காக ஒரு கிராமத்தை உருவாக்கினோம்''

● **நிதி வசதிக்கு என்ன செய்கிறீர்கள்?**

''உலகெங்கும் உள்ள பல ஆதரவாளர்கள் நன்கொடை தருகிறார்கள். யூனிசெஃப் போன்ற அமைப்புகளும் நிதி உதவி அளிக்கின்றன.''

● **இந்தியாவில் எத்தனை 'கிராமங்கள்' இருக்கின்றன?**

''இருபத்தெட்டு. உலகின் வேறு எந்த நாட்டிலும் இந்த அளவு இல்லை. தாம்பரத்தில் கூட ஒன்று மிகச் சிறப்பாக நடந்து வருகிறது. மேகாலயா, போபால், (காஸ் விபத்துக்குப் பிறகு) உத்தரகாசி (பூகம்பத்துக்குப் பிறகு) இங்கே எல்லாம் சில்ட்ரன்ஸ் வில்லேஜ்களை உருவாக்கினோம். மகாராஷ்டிராவிலுள்ள லாட்டூரில், சமீபத்தில் பூகம்பச் செய்தி கேட்டதும் ஓடோடிப்

போய் மொத்தக் குழந்தைகளுக்கும் வில்லேஜ் உருவாக்கினோம். தீவிரவாதிகளால் பாதிக்கப்பட்ட பஞ்சாப், ஜம்மு-காஷ்மீரில் கூட எஸ்.ஓ.எஸ். குழந்தைகளின் கிராமங்கள் செயல்படுகின்றன. மத்திய அரசு நிலம் கொடுத்து விடுகிறது.

''உலகிலேயே மிகப் பெரிய குழந்தைகள் நல ஸ்தாபனமாகிய எங்கள் அமைப்பு, ஹெல்த் சென்டர், கிண்டர்கார்ட்டன். யூத் சென்டர் என்று சுற்றுப்புற கிராமங்களுக்கும் பயன்படும் அமைப்புகளை வெற்றிகரமாக நடத்தி வருகிறது.

''இந்த வருடத்தைக் குடும்ப உறவுகள் ஆண்டாகக் கொண்டாட வேண்டும் என்ற தீர்மானத்தை முன் மொழிந்தவர்களே நாங்கள்தான். ஒரு குடும்பத்தில் வாழ்கிறோம் என்ற உணர்வையும், பாச உணர்ச்சியையும் அநாதைக் குழந்தைகளுக்கும் அளித்து வருவதுதான் எங்கள் வெற்றியின் ரகசியம்.''

பேட்டி: நம்பி
புகைப்படம்: பாலாஜி

# பங்குகள் வாங்கணுமா? ஃபோன் பண்ணுங்கள்!

ஒரு நிறுவனம் மக்களிடம் மூலதனம் கோரி பங்கு மார்க்கெட்டுக்கு வருகிறது. நாளிதழ்களில் விளம்பரமும் செய்கிறது. உங்களுக்கும் வாங்க ஆசைதான். ஆனால், 'விண்ணப்ப ஃபாரம் எங்கு பெறுவது? எப்படி விண்ணப்பிப்பது? குறிப்பிட்ட நிறுவனத்தின் பொருளாதாரப் பின்னணி என்ன?' என்றெல்லாம் தெரிந்து கொள்ள விருப்பம்.

* வாடிக்கையாளருக்குச் சரியான தகவல்


* செரியன்

Direct Dialogue நிறுவனம் உங்களுக்கு உதவக் காத்திருக்கிறது. 6216838 என்ற எண்ணுக்கு ஃபோன் செய்தால் போதும். நீங்கள் அறிய விரும்பும் தகவல்களைத் தருவார்கள். விண்ணப்ப ஃபாரத்தை உங்கள் வீட்டுக்கே ஒருவர் எடுத்து வந்து கையெழுத்துப் பெற்று, காசோலையையும் பெற்றுக் கொண்டு திரும்புவார். உங்கள் சார்பில் பணத்தைக் கட்டி ரசீது பெற்றுத் தருவார்.



இப்படி பங்குதாரர்களுக்குச் சேவை புரியவென்றே உருவாகியுள்ள இந்த நிறுவனம் இதற்காகப் பங்கு வாங்குகிறவர்களிடம் கட்டணம் ஏதும் பெறுவதில்லை. ''பங்குகளை விநியோகிப்பதற்காக நிறுவனம் தருகிற கமிஷன் தொகையே எங்களுக்குப் போதுமானது'' என்கிறார் நிறுவனத்தின் மானேஜிங் டைரக்டரான செரியன். இரவு பத்தரை மணி வரை செயல்படுகிறது Direct Dialogue அலுவலகம்!

- துளசி
படம் : கோபிநாத்

# Kalki Shopping Page




நீங்களும் சொந்த வீடு பெற்றுச் சுகமாக வாழ மார்ஸ் உங்களுக்கு 70% கடன் வசதியுடன் உதவி புரிகிறது.

தற்சமயம் நீங்கள் உடனே குடியேற உள்ள இடங்கள் :

1. சத்யா பிளாட் : (Single and Double Bed Room)
   15, ஆர். என். நம்பியார் தெரு,
   ரங்கராஜபுரம், சென்னை - 600 024.
2. ஊரப்பாக்கம் ரயில் நிலையத்தை ஒட்டி 600 சதுர அடி (Double Bed Room) தனித்தனி வீடும் அரசாங்க அங்கீகாரத்துடன் 70% கடன் வசதியுடனும் கட்டிக் கொடுக்கப்படும்.
3. பத்மா பிளாட் : (Single and Double Bed Room)
   13, சாய் நகர் அனெக்ஸ்,
   இரண்டாவது குறுக்குத் தெரு, சின்மயா நகர்,
   சென்னை - 600 111. (Under Construction)

மற்ற தேவைகளுக்கு உடனே அணுகவும்.

## Mars Constructions

*Builders and Flat Promoters*

30, Natesan Street,
(Near Mambalam Railway Station)
T. Nagar, Madras - 600 017. Phone : 445393

---

**தங்க நகையில்
மங்கையர் எண்ணம்
எங்கள் கைவண்ணம்**



22ct தங்கம், வைர,
வெள்ளி நகைகளுக்கு




## சாந்தி கோல்டு ஹவுஸ்

எங்கள் நகை
சேமிப்புத் திட்டத்தில்
சேர்ந்து பயன்பெறுங்கள்.
சேரும் அங்கத்தினர்களுக்கு
மாதாந்திர தவணைத் தொகைக்கு
ஏற்ற பரிசுப் பொருள்
அளிக்கப்படும்.

*72, உஸ்மான் ரோடு,
தி. நகர், சென்னை - 600 017.*
Phone : 441730.

---




## அருட்சாயி அந்தாதி

இவ்வுலகில் மனிதர்களின் கஷ்டங்களை நீக்குவதற்கு அவ்வப்போது பல மகான்கள், சித்த புருஷர்கள் தோன்றியுள்ளனர். அவ்வழியில் வந்தவர் பகவான் ஷிர்டி சாயி பாபா அவர்கள். "நானிருக்க பயமேன்" என்ற தாரக மந்திரத்தை இவ்வுலகில் எடுத்துரைத்தார்.

அவருடைய பெருமைகளை அழகாக சக்தி சீனிவாசன் அவர்கள், "அருட்சாயி அந்தாதி" என்ற பாடல் தொகுப்பில் எளிய நடையில் எழுதியுள்ளார். பம்பாய் S. ஜெயஸ்ரீ தன் இனிய குரலில் மிக அழகாகப் பாடியுள்ளார். இந்நிகழ்ச்சிக்கு மயிலை மாமுனிவர் தவத்திரு சுந்தரராம் சுவாமிகள் அருளாசி வழங்கியுள்ளார். நாம் அனைவரும் கேட்டு மகிழ வேண்டிய ஒலிப் பேழை. இது ஒரு சங்கீதா வெளியீடு (6ECD 6191)

---

## சிறந்த சிறுகதை தொகுப்புக்கள்

| | |
|---|---|
| 1. கனகாம்பரம் - கு. ப. ரா. | ரூ. 15.00 |
| 2. சந்தனக் காவடி - தி. ஜ. ர. | ரூ. 15.50 |
| 3. கன்யாகுமரி - த. நா. குமாரசாமி | ரூ. 15.00 |
| 4. த. நா. சேனாபதி சிறுகதைகள் | ரூ. 15.00 |
| 5. சக்ரவாகம் - ந. சிதம்பரசுப்ரமணியம் | ரூ. 13.00 |
| 6. கவிரொட்டி - சூடாமணி | ரூ. 22.00 |
| 7. புயல் நிலைப்பதில்லை - பிரேமா நந்தகுமார் | ரூ. 10.00 |
| 8. கற்றது குற்றமா? - வ. ரா. | ரூ. 11.00 |
| 9. ஐரோப்பியச் சிறுகதைகள் - கா. ஸ்ரீ. ஸ்ரீ. | ரூ. 15.00 |
| 10. பிரேம்சந்தின் சிறந்த சிறுகதைகள் | ரூ. 15.00 |
| 11. காண்டேகர் கதைகள் II, III & IV | ரூ. 59.00 |
| 12. கதை சொல்லுகிறார் கி. வா. ஜ. | ரூ. 24.00 |
| 13. படித்த மனைவி - 'லக்ஷ்மி' | ரூ. 20.00 |
| 14. வசந்தா - கமலா பத்மநாபன் | ரூ. 24.00 |

'தினமணி' ஆசிரியர் 'சுதாங்கன்' எழுதிய
விறுவிறுப்பான தொடர்
**"தேதி இல்லாத டைரி"**
விரைவில் வெளிவரும்

## அல்லயன்ஸ் கம்பெனி

*244, ராமகிருஷ்ணா மடம் சாலை,
மயிலாப்பூர், சென்னை - 600 004.
போன் : 71314*

# Kalki Shopping Page

# Kalki Shopping Page

தாம்பரத்திற்கு மிக அருகாமையில்
1,99,000 ரூபாய்க்கு
அழகான தனி வீடு

- 5 தவணைகளில் பணம் செலுத்தலாம்.
- முன்னணி நிதி நிறுவனங்கள் மூலம் உங்கள் வசதிக்கேற்ப கடன் வசதி செய்து தரப்படும்.
- தரமான கட்டமைப்பு
- குறித்த காலத்திற்குள் கட்டி முடிக்கப்படும்.

அணுகவும் :

**பாலபாரி பில்டர்ஸ் (பி) லிமிடெட்**

2, ராமநாதன் தெரு, தி. நகர்,
சென்னை - 600 017.
தொலைபேசி எண் : 445161

Associate Concern :

**தாயகம் ரியல் எஸ்டேட்ஸ்**

36, ரெட்டிக்குப்பம் ரோடு,
(அரங்கநாதன் சுரங்கப்பாதை எதிரில்),
மேற்கு மாம்பலம், சென்னை - 600 033.

---

MAXIMA - A Unique Group Of Companies



## MAXIMA

Maxima Credit Links (P) Limited
Maxima Chits Madras (P) Limited,
Maxima Investment & Finance Company
*(incorporated Under Companies Act. 1956)*

OFFERS

## 25% p.a.

ON DEPOSITS THROUGH POST-DATED CHEQUES

*For Details Contact :*

**MAXIMA INVESTMENT & FINANCE COMPANY**

1, Vedantha Desikar Street,
R. K. Mutt Road, Mylapore,
Madras - 600 004. Phone : 77449.
Fax : 044-8276722.

Maxima - Maximum Dependability

---

## B. M. SILK SAREES

அசல் தள்ளுபடி விற்பனை

25% முதல் 45% வரை

*11.3.94 முதல் 20.3.94 வரை*

● காஞ்சிபுரம் சில்க் சாரீஸ், ● Peacock Silks,
● பிரிண்டட் சாரீஸ், ● கோரா சில்க்ஸ் & காட்டன்,
● பர்வதா சுங்குடி சாரீஸ்

## B. M. SILK SAREES

5, வடக்கு மாட வீதி,
(கபாலீஸ்வரர் கோயில் அருகில்)
மைலாப்பூர், சென்னை - 600 004.


ஒரத்தநாடு காவல் நிலையம்
சர்வதேச மகளிர் தினம்!
சென்னையில் கோலாகல விழா.
பெண்ணுரிமையை நிலை நாட்டுவோம்!
— ஜெ. சபதம்.


ஜெனிவாவிலும் ஒரு விபத்து!
போபர்சின் கொள்ளைக் குழப்பம்
காஷ்மீரில் மனித உரிமைகள் மீறல் குறித்து, இந்தியா மீது பாக். கண்டனத் தீர்மானம்.
இன்னிக்குப் பூஜை போட்றாங்க, நாளைக்குப் பலியே போட்டுவாங்க... எப்படியாவது தடுத்தாகணும்!
வாழப்பாடி
மணிசங்கர ஐயர்
தங்க-பாலு
தமிழக. இ. காங்கிரஸ்



# கல்கி



1994
மார்ச் 20
மலர் : 52
இதழ் : 34
ஸ்ரீமுக
பங்குனி 7

தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

## தமிழனுக்கு அடித்த அதிர்ஷ்டம்!

எல்லோரும் ஒரு தடவை ஜோராய் கை தட்டுங்கள்! தமிழக முதல்வருக்குத் தனி விமானம் வாங்கப்படுகிறது. போதாக் குறைக்கு ஒரு புத்தம் புது ஹெலிகாப்டரும் மக்களின் வரிப்பணத்தில் வாங்கப்படுகிறது. பிறகென்ன, அரசுப் பணிகளெல்லாம் இனி ஜெட் வேகத்தில் நடக்கும்! "கோட்டையில் கோப்புகள் உறங்குகின்றன" என்று இனி ஒரு பயலும் பல்லின் மேல் நாக்கைப் போட்டுப் பேச முடியாது.. ஃபைல்கள் உறங்கினாலும் இனி அவை, புதிய சொகுசு ஜெட் விமானத்தில்தான் உறங்குமே தவிர, கோட்டையில் அல்ல. ஜெ பறக்கும் இடங்களுக்கெல்லாம் சேர்ந்து பறக்க, சசிகலாவுடன் கோப்புகளும் தயாராக இருக்கும். முன்னர் ஊட்டிக்கு வேனில் போனதுபோல் இப்போது விமானத்தில் போகும். போனது போலவே திரும்பி வரும்!

"சிங்கப்பூர் காரிடார் என்ன ஆச்சு?" என்று சில அசடுகள் இங்கே கேட்டுக் கொண்டிருந்தார்கள். 'ஜெ'யின் தனி விமானப் பயணத்துக்கு இதோ சிங்கப்பூர் காரிடார் திறந்தாயிற்று! பலகோடி வரிப்பணத்தை விழுங்கப் போகும் செஸ்னா-550 ஜெட் விமானத்தை விற்க, சிங்கப்பூரிலிருந்துதான் அந்த விமானக் கம்பெனியின் பிரதிநிதி வந்தார். பேரம் பேசி முடித்தாயிற்று! இனி அவரவரும் லாபத்தைக் கணக்குப் பண்ணி, அயல் நாட்டு வங்கிகளில் உள்ள பணத்தைச் சரிபார்க்க வேண்டியதுதான். இவ்வாறிருக்க, 'சிங்கப்பூர் காரிடார் மூலம் சிலபல தொழில்கள் வரவில்லையே' என்று முணுமுணுத்துக் கொண்டிருப்பதில் என்ன பயன்?

இனி 'ஜெ' தமது வீட்டிலிருந்து கோட்டைக்கு ஹெலிகாப்டரிலேயே பறக்கலாம். இதற்காக ஒரு ஹெலிபேடை கோட்டை வளாகத்திலும் மற்றொன்றை போயஸ் தோட்ட வட்டாரத்திலும் அமைக்க வேண்டியதுதான். இதற்காக "வேதா நிலையம்" நீங்கலாக ஓரிரு பங்களாக்களை இடித்துத் தரை மட்டமாக்க நேரலாம். சொந்தக்காரர்கள் கோபப்படக் கூடாது. தமிழகத்தின் தனிப் பெரும் தலைவிக்காக இந்தச் சிறு தியாகத்தைச் செய்தால் என்ன? வேண்டுமானால் ஹெலிபேட் காண்ட்ராக்டுக்கு நீங்களே விண்ணப்பிக்கலாம். கொடுக்க வேண்டியதைக் கொடுத்துப் பெற வேண்டியதை பெறலாம். ஜெ.ஹெலிகாப்டரில் கோட்டைக்குப் போவதால், இனி சாலைப் போக்குவரத்துக்கு இடைஞ்சல் இராது. அம்மையார் கோட்டைக்குப் போகும் முன், குளிக்கத் தயாராகும் போதே சாலைகளில் வாகனங்களை நிறுத்திவிடும் கொடுமை இனி நடக்காது! மக்களுக்கு எவ்வளவு வசதி! அது மட்டுமா? "'ஜெ' வீட்டின் மேல் மர்ம விமானம்!" என்று செய்தி வந்து, இனி மக்களைக் கலங்க அடிக்காது. வீட்டின் மீதாக தனி ஹெலிகாப்டர் பறப்பதில் மர்மமே இராது!

வெள்ளம், வறட்சி முதலியவற்றின் பாதிப்பை ஜெ. தனி விமானமேறிச் சென்று பார்வையிடுவதற்காகவே இங்கே வெள்ளத்தையும் வறட்சியையும் வரவேற்க வேண்டியதுதான். அடிக்கடி அவை வந்தால்தானே, மத்திய அரசிடம் நிவாரணத்துக்கு நிதி ஒதுக்கக் கோரி ஆளும் கட்சியினரும் ஆதாயமடையலாம்!

இது போன்ற சமயங்களில் யாரேனும் ஒரு மந்திரியை மட்டும், ஜெ தமது தனி விமானத்தில் ஏற அனுமதித்து, மற்ற மந்திரிகளுக்கு 'ஐயோ! நம்மைப் புரட்சித் தலைவிக்குப் பிடிக்கவில்லையோ?' என்ற அச்சத்தை ஏற்படுத்தி நன்றாய்க் கடுக்காய் கொடுக்கலாம்!

டில்லியில் பிரதமரைச் சந்திக்க, சந்தித்து வாழப்பாடி பற்றி புகார் சொல்ல, ஜெ. அடிக்கடி போய் வரலாம். இடையிடையே சு.சுவாமி பற்றி ஒரு குரல் அழுது விட்டு வரவும் சில ஜெட் டிரிப்புகளை அடிக்கலாம்!

இனி தமிழன், மின் கட்டண உயர்வு, அத்யாவசியப் பண்டங்கள் பலவற்றின் விலை உயர்வு, மோசமான சாலைகள், நாற்றமடிக்கும் சாக்கடைகள், ஆஸ்பத்திரிகளின் அவல நிலை, மக்கள் இயற்கை உபாதைகளைத் தணித்துக் கொள்ளக் கூட மறைவிடமும் தண்ணீரும் இல்லாத குறை போன்ற சகலத்தையும் மறந்துவிட்டு, 'புரட்சி தலைவி 43,000 அடி உயரத்தில், மணிக்கு 440 மைல் வேகத்தில் அலுங்காமல் நலுங்காமல் சொகுசுப் பயணம் செய்கிறாரே' என்று நினைத்து நினைத்து மகிழ்ந்து போகலாம்!

தமிழனைவிட அதிர்ஷ்டசாலி வேறு யார்?

# கம்ப்யூட்டர் தயாரிப்பில் ராட்சச விலங்குகள்!

'**கா**க்கை குருவி எங்கள் ஜாதி' என்று பாடிய பாரதியார் இன்று இருந்தால் அந்த வரிசையில் டைனசார்களையும் சேர்த்துக் கொண்டிருப்பார்! எழுபத்தைந்து மில்லியன் ஆண்டுகளுக்கு முன்னால், பூமியை ஆக்கிரமித்த இந்த ராட்சஸ விலங்குகள் தான் படிப்படியாகப் பரிணாம வளர்ச்சி அடைந்து, பறவைகளாக இன்று சிறகடிக்கின்றன என ஒரு புதிய கண்டுபிடிப்பை வெளியிட்டிருக்கிறார் அமெரிக்க விஞ்ஞானியான ஜாக் ஹார்னர்.

ஜாக் ஹார்னர் டைனசார்கள் பற்றிய ஆராய்ச்சியின் பிதாமகராகக் கருதப்படுபவர். அமெரிக்காவின் மான்டானா மாநிலத்தில் ஏராளமாய் அகழ்வாராய்ச்சிகள் செய்து, டைனசார்களின் புதை படிவங்களைக் (fossils) கண்டெடுத்து ஆய்வுகள் நடத்தி வருகிறார். இத்துறையின் மற்ற விஞ்ஞானிகள் பிரும்மாண்டமான டைனசார் பதிவுகளையும் எலும்புக் கூடுகளையும் தேடிக் கொண்டிருக்க, ஹார்னர் மட்டும் குட்டி டைனசார்களிடம் ஈடுபாடு காண்பித்தார். பறவைக்கூடு போன்ற அமைப்பில் பூமியில் சுமார் ஒரு டஜன் 'டைனசார் கூடுகள்' இவருக்கு அகப்பட்டன. அவற்றில் பொரியாத முட்டைகளும், புத்தம்புதிதாய்ப் பொரிந்த குஞ்சுகளுமாக டைனசார் குடும்பங்கள் fossil வடிவாகக் கிடைத்தன.

பாறையோடு பாறையாக ஒட்டிக் கிடந்த சில டைனசார் எலும்புகளின் பதிவுகளை CAT Scanner உதவியுடன் ஆராய்ந்தார் ஹார்னர். (நம் உடல்களைப் பரிசோதிக்க ஆஸ்பத்திரிகளில் உள்ள அதே Scan முறை!) மின் காந்த அலைகளைக் கொண்டு பாறையையும் எலும்பையும் வேறுபடுத்திக் கவனிக்க முடிந்தது.

டைனசார்களின் வாழ்க்கை முறை பற்றியும் பரிணாம வளர்ச்சி குறித்தும் நிறையத் தெரிய வந்தது. இளம் டைனசார்களின் உடற்கூறு அமைப்பு, இன்று உள்ள பறவைகளின் உடற்கூறு அமைப்பை ஏறத்தாழ ஒத்திருந்தது.

இயற்கையினால் வரமளிக்கப்பட்டு வளர்ந்த டைனசார் விலங்குகள், எலும்புக்



* நடிகர்களைத் தனியே படம் பிடித்து....



* .... கம்ப்யூட்டர் உருவாக்கிய படங்களுடன் இணைத்து....



✱ பறவை போல் உடல் அமைப்பு....

கூடு அமைப்பிலும் உடல் சூடு ஒற்றுமையிலும் கூடு கட்டி முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும் பழக்கத்திலும் பறவைகளை ஒத்திருக்கின்றன என்பது ஹார்னருடைய ஆராய்ச்சிகளின் முடிவு.

**அ**மெரிக்காவில் சக்கை போடு போட்டுவிட்டு, இந்தியக் குழந்தைகளையும். (ஏன் - பெரியவர்களையும் கூடத்தான்!) தியேட்டர் இருக்கை நுனிகளில் கட்டிப் போடப் போகிற சினிமா 'ஜுராஸிக் பார்க்' ஹார்னரின் ஆராய்ச்சிகள், கண்டுபிடிப்புகளின் அடிப்படையில் தான் இதன் கதை -

இப் படத்தைத் தயாரித்த ஸ்பீல்டர்க், அதில் தோன்றும் டிரனோஸாரஸ் ரெக்ஸ் (செல்லப் பெயர் டி. ரெக்ஸ்!) என்ற டைனஸாரை டேபிள் டாப் மாடலாகவும் அசல் அளவு ரோபோவாகவும் உருவாக்கி விட்டுப் படப்பிடிப்பை நடத்தத் திட்டமிட்டிருந்தார்.

ஆனால், என்ன அதிர்ஷ்டம்! படப்பிடிப்புத் தொடங்கவிருந்த சமயத்தில் கம்ப்யூட்டர் ஆனிமேஷன் தொழில் நுட்பத்தில் ஒரு பெரிய முன்னேற்றம் ஏற்பட்டது. Industrial Light and Magic (ILM) என்ற கம்ப்யூட்டர் ஸ்பெஷல் எஃப்க்ட்ஸ் நிறுவனம் டிஜிடல் முறையில் புள்ளிகளைப் கம்ப்யூட்டர் திரையில் இணைத்து டி. ரெக்ஸை உருவாக்கியது. 'ஜுராஸிக் பார்க்' திரைப் படத்தில் ஒரு சில க்ளோஸ்அப் சீன்களில் மட்டுமே ரப்பர் மாடல் டைனஸார்கள் பயன் படுத்தப் பட்டுள்ளன. மற்ற கட்டங்களில் (சுமார் 54 இடங்கள்) கம்ப்யூட்டர் வடிவமைத்த டைனஸார் சித்திரங்களைத் தனியே படமெடுத்து நடிக, நடிகையர் நடித்துள்ள காட்சிகளுடன் ஹைடெக் முறையில் இணைத்திருக்கிறார்கள்.

இப் பணியைத் திறமையுடன் வெற்றிகரமாகச் செய்து காட்டியவர் ILM நிறுவன புரடக்ஷன் மானேஜரான கேய்ல் கரி. ஆண்களே ஆதிக்கம் செய்யும் இத்துறையில் ஈடுபாடு கொண்ட அபூர்வப் பெண்மணி! பிரிட்டிஷ் நிபுணர்கள் தயாரித்த 'மடடார்' என்ற ஸாஃப்ட்வேர் உதவியுடன்தான் இதைச் சாதித்திருக்கிறார்.

**ச**மீபத்தில் இந்தியா வந்திருந்த கேய்ல் கரி, ''சினிமா தயாரிப்பில் இன்று கம்ப்யூட்டரும் காமெராவைப் போல் இன்றியமையாத கருவியாகி விட்டது. அதைப் புறக்கணிக்கும் தயாரிப்பாளர் தவறு செய்கிறார்...'' என்று பேசியிருக்கிறார்.

'இந்திய கம்ப்யூட்டர் கிராஃபிக்ஸ் துறை விளம்பரப் படங்களைப் பொறுத்த மட்டில் வெகுவாக முன்னேறி உள்ளது - ஆனால் இந்தியத் திரைப்படங்களில் அந்தத் தொழில் நுட்பம் இன்னும் முழுமையாகக் கையாளப்படவில்லை' என்பதும் கேய்ல் கரியின் கணிப்பு!

நன்றி : ஸ்பான்.

## வெடிகுண்டு வழக்கு எப்போ வெடிக்கும்?

**நா**ட்டையே உலுக்கிய பம்பாய் தொடர் வெடி குண்டு வழக்கில் சம்பந்தப் பட்டுள்ளதாகக் கூறப்படும் முக்கிய நபரான தாவூத் இப்ராஹிம் உட்பட குற்றம் சாட்டப் பட்டவர்களின் எண்ணிக்கை 195. இவர் களில் 44 பேர் இன்னும் போலீசில் சிக்க வில்லை. இந்த வழக்கு விசாரணையும் இன் னும் ஆரம்பிக்கப்படவில்லை. விசாரணை ஆரம்பிக்கப்படுவதற்கான அறிகுறிகளும் தென்படவில்லை!

வழக்கு விசாரணையை தானாவிலா, பூனாவிலா அல்லது பம்பாயிலா எங்கே நடத்துவது என்பதிலேயே வாதப் பிரதி வாதங்கள் நடந்து, இழுபறி நிலை தான் நீடிக்கிறது!

– வித்யா சிவகுமார்.



# பங்குமார்க்கெட்டுக்கு வரும் நம்பகமான நிறுவனங்கள்

பட்ஜெட்டில் நிதி அமைச்சர் ஏகப்பட்ட சலுகைகள் அளித்திருப்பதைக் காண, பங்கு மார்க்கெட்டில் ஷேர்களின் விலைகள் உயரும் என்றுதான் பலரும் எதிர்பார்ப்பார்கள். ஆனால் அவ்வாறு நேராதிருக்க முக்கிய காரணம், பட்ஜெட்டில் ஷேர் விற்பனைக் கமிஷன் மீது போடப்பட்டுள்ள புதிய வரிதான். ஒரு வேளை பங்குமார்க்கெட்டையும், தரகர்களையும் ஒரு கட்டுப்பாட்டில் வைப்பதற்காகவே மன்மோகன்சிங் போட்ட திட்டமாகவும் இருக்கலாம்! எனினும், பொதுவாகத் தொழில் வளர்ச்சிக்கு உதவுபடியான பட்ஜெட் என்பதால், பல நிறுவனங்களும் விரிவாக்கம் கருதி, மக்களிடம் மூலதனம் கோரி பங்கு மார்க்கெட்டுக்கு வந்த வண்ணம் உள்ளன. இதோ சில நம்பகமான நிறுவனங்கள்:

## NATCO LABORATORIES LTD

மருந்துகள் தயாரிப்புத் துறையில் NATCO என்ற பெயர் மிகவும் பிரசித்தி பெற்றது. இந்த குருப் நிறுவனங்களின் ஓர் அங்கமாக ஹைதரா பாத்தில் "நாட்கோ லாப்ஸ்" தோற்றுவிக்கப்படுகிறது. இதன் நோக்கம், ஆன்டிபயாடிக் போன்று பெரிய அளவில் தயாரிக்கப்பட வேண்டிய அதிநவீன மருந்துகளை உற்பத்தி செய்வதாகும். மருந்துகள் தயாரிப்புத் துறை இன்று லாபகரமாக இயங்கி வருகிறது. மக்களின் ஆரோக்கியத்தைக் காக்க வேண்டிய கடமை உணர்வு அரசிடம் அதிகரிக்க, அதிகரிக்க, மருந்துகளுக்கும் தேவை கூடி வருகிறது. தற்போது இந்த நிறுவனம் தொடங்கியுள்ள திட்டத்துக்கு 45 கோடி ரூபாய் மூலதனம் தேவை. நிறுவன நிர்வாகமே ஏற்றது போக, மக்களுக்கு 73,00,000 பங்குகளை ரூ.10 விலைக்கே வழங்குகின்றனர். மிச்சத்தை நிதி நிறுவனங்கள் கடனாக அளிக்கின்றன. "நாட்கோ லாப்ஸ்" இரண்டு மூன்று ஆண்டுகளில் நல்ல வளர்ச்சி கண்டு லாபம் ஈட்டும் என எதிர்ப்பார்க்கலாம். நல்ல முதலீடு.

## CHINAR EXPORTS LTD

புதுதில்லியில் அமைந்துள்ள இந்த நிறுவனம் ஏற்கெனவே பிளாஸ்டிக், ரசாயனப் பொருள்கள், ரப்பர், விளையாட்டுச் சாதனங்கள், ஜவுளி, ரத்தினங்கள் பதித்த நகைகள், பொறியியல் சாதனங்கள் முதலியவற்றை ஏற்றுமதி செய்வதில் சக்கைப் போடாகச் செயல்பட்டு, அரசிடமிருந்தும் பொறியியல் ஏற்றுமதி அபிவிருத்தி கவுன்சிலிடமிருந்தும் பல பாராட்டுக்களையும் பரிசுகளையும் பெற்றுள்ளது. தற்போது மேகாலயா மாநிலத்தில் கிரானைட் பாறைகளைப் பெயர்த்து எடுத்து ஏற்றுமதி செய்ய ஒரு திட்டம் வகுத்துள்ளது. இதற்கு 35 கோடி ரூபாய் முதலீடு செய்ய வேண்டியுள்ளது. இதற்காகப் பத்து ரூபாய் பங்குகளை ரூ.26 கூடுதல் விலைக்கு அதாவது ரூ.36க்கு விநியோகிக்கிறது. இவ்வாறு ரூ.24.25 கோடி திரட்ட உத்தேசம். மிச்சத்தை நிறுவன நிர்வாகமும் நிதி நிறுவனங்களும் இட்டு நிரப்பும். இந்த நிறுவனம் ஏற்கெனவே செய்து கொண்டுள்ள ஒப்பந்தப்படி, ஒரு லண்டன் கம்பெனி, ஆண்டொன்றுக்கு 20,000 கன மீட்டர் அளவுக்கு கிரானைட் கற்களை அடுத்த ஐந்து ஆண்டுகளுக்கு வாங்கிக் கொள்ளும் என்பது குறிப்பிடத்தக்கது. ரூ.26 கூடுதல் விலை என்பது சற்று அதிகம்தானென்றாலும் எதிர்கால வளர்ச்சி வாய்ப்பு நிறைய உள்ளது என்பதால் நல்ல முதலீடாகவே கருதலாம்.

## ELCOT HITECH TOOL ROOM LTD

தமிழ் நாடு எலக்டிரானிக் கார்ப்பரேஷனும், தொழில் நுணுக்கம் அறிந்த சிலரும் சேர்ந்து கூட்டுத் துறையில் ஆரம்பிக்கும் நிறுவனம். சென்னை அருகே சோழிங்க நல்லூரில் அமைகிற இத் தொழிலகத்தில், வார்ப்படங்களுக்குத் தேவையான அச்சுகள் போன்றவற்றையும் இன்னும் மோட்டார் கார்கள், எலெக்ட்ரானிக் சாதனங்கள் போன்றவற்றில் இடம் பெறும் நுணுக்கமான சில பாகங்களையும் தயாரிக்க உத்தேசம். தேவைப்படும் மூலதனம் ரூ9.90 கோடி. இதற்கு ஐ.டி.பி.ஐ. கணிசமாகக் கடன் வழங்குகிறது. நிறுவன நிர்வாகிகளே செய்யும் முதலீடு தவிர, பொதுமக்களுக்கு 24,80,000 பங்குகள் ரூ.10 விலைக்கே வழங்கப்படுகின்றன. இவ்வாறு ரூ.248 லட்சம் திரட்டத் திட்டம். இந்த நிறுவனத்தின் தயாரிப்புக்களுக்குப் பல்வேறு தொழில் துறைகளிலும் நல்ல கிராக்கி இருக்கும் என்பதால், எதிர்காலம் சிறப்பாகவே அமையும் என்று கருதலாம். அதற்கேற்ப இன்றைய முதலீடும் நாளைய லாபமாக விளங்கும்.

- வி.கோபாலன்

# பொய்க் கண்ணாடி

உருவமும் அதன் கண்ணாடிப் பிரதி பிம்பமும் போல் இவளாகவே அவள்.

இனி அப்படி இல்லை.

அந்த ஒற்றுமை, ஒவ்வொரு சிறு விவரத்தின் ஒருமை, இன்று ஒரு மகத்தான வேற்றுமையின் கொடுமையை அடிக் கோடிட்டு வலியுறுத்துகிறது.

ஏன்?... எனக்கு இது ஏன்? நெஞ்சை அடைத்தது. இது துக்கமா, விதியைச் சபிக்கும் ஆக்திரமா, அல்லது யதார்த்தத்தை மறுக்கும் புரட்சியா?

சோர்ந்து நாற்காலியில் சாய்ந்தாள்.

''என்ன சாரு? களைப்பாயிருக்கா? கை சோர்ந்து போகுதா? நான் தள்ளட்டுமா?''

''எங்கே, அதலபாதாளத்துக்கா?'' எதிரே நின்ற சரளாவின் முகம் சட்டென்று வாடியது.

எதிரே நின்ற, சரளா நிற்கிறாள். நடக்கிறாள். ஓடக்கூட முடியும் அவளால்.

சாரதாவின் கைகள் பரபரவென்று சக்கரங்களை இயக்கின. அவள் அறையை நோக்கிச் செலுத்தின.

வீட்டின் நடு மற்றும் பிற்பகுதியில் பழைய கட்டடம்தான். முற்பகுதியை மட்டும் மொசைக்கும் கிரில்லுமாய் புதுப் பாணியில் மாற்றிக் கட்டிய வீடு. பழம்பகுதியெங்கும் அறைக்கு அறை நடுவில் படி உண்டு. அதாவது, முன்பு. இப்போது அவளுடைய அறைக் கதவு நிலையின் படியை, வீட்டுச் சொந்தக்காரர் அனுமதியுடன் இடித்துப் பூசி சமப்படுத்தியிருந்தார்கள், நாற்காலிச் சக்கரங்கள் சீராய் உருண்டு செல்ல. அந்தச் சமப்பட்ட தரையிலிருந்து உலகமே அவளை நோக்கி இரக்கத்துடன் விரல் சுட்டுவதுபோல் உணர்ந்தாள்.

பின்னாலேயே வந்த சரளா ''நீ இப்போ டிபன் சாப்பிடறயான்னு அம்மா கேட்டாங்க'' என்றாள்.

''வேணாம்.''

''எப்ப வேணுமோ சொல்லு, கொண்டு வரேன்.''

''நீ கொண்டுவர வேணாம், அம்மா கொண்டு வரட்டும்.'' நாற்காலி அறைக்குள் நுழைந்ததுமே சாரதா இடது புறங்கையால் கதவை அறைந்து சாத்தினாள். சரளாவின் உருவம் பட்டென்று வெட்டப்பட்டு மறைந்தது.

நாற்காலி படுக்கையின் பக்கத்தில் வந்து நின்றது. இரண்டும் ஒரே மட்டத்தில் இருந்தன. அப்படியே சரிந்து படுக்கைக்கு வர முடியும். காலைப் பின்னோடு இழுத்துக் நீட்டிக் கொண்டு படுக்க முடியும்.

அவள் அது எதையும் செய்யவில்லை. நாற்காலியில் உட்கார்ந்தபடி சுவரை வெறித்தாள். கண்ணீர் வரவில்லை. தன் நிலையை ஆஸ்பத்திரியில் உணர்ந்த கணத்திலிருந்து, வேண்டுமளவு அழுது அழுது, இப்போது கண்ணீர் கூட வலுவிழந்தாற் போல் ஓய்ந்திருந்தது. மாநிற முகத்தின் மீது கருட்டைக் கூந்தல் இழை நெளிந்து நீண்ட கண்ணில் விழுந்து உறுத்தியபோது, அதை நுனியால் ஒதுக்கிக் கொண்டாள்.



கதவைத் திறந்து கொண்டு அம்மா உள்ளே வந்தாள்.

''சாரு, ஏதானும் வேணுமாம்மா? பாத்ரூமுக்குப் போகணுமா?''

''இல்லை.''

''ஏதானும் சாப்பிடறயா கண்ணு?''

''எதுக்கு கண்ணு மூக்குன்னு இந்தப் புதுப் பழக்கமெல்லாம்? எனக்கு என்ன, நாளை எண்ணியா வச்சிருக்கு? அதான் ரொம்ப அழகாய்ப் பிழைக்க வந்துட்டேனில்ல?''

பள்ளி ஆசிரியை. சக ஆசிரியைகளுடனும் மாணவர் குழந்தைகளுடனும் பள்ளி பஸ்ஸில் வேடந்தாங்கல் சுற்றுலா சென்று திரும்பும்போது எதிரே ஒரு போதை டிரைவரின் லாரியுடன் மோதி, யந்திர முழக்



கத்துடன் விபத்து. பஸ் குடை சாய்ந்து அலறல்கள், ரத்தம். மருத்துவமனையில் நோவுடன் கண் விழித்தாள். நல்ல வேளை, குழந்தைகள் யாருக்கும் பெரிய சேதமில்லை. இன்னொரு ஆசிரியைக்கு வலது கையில் எலும்பு முறிவு. மாவுக் கட்டு படிப்படியாய் குணப்படுத்திவிடும். ஆனால் இவளுக்கு இனி இரண்டாவது கால் கிடையாது.

''நான் போறேன் சாரு. ஏதானும் வேணும்னா கூப்பிடு.''

தாய் கதவை அடைந்தபோது ''அம்மா!'' என்று மெல்லிய ஒலி. திரும்பினாள். சாரதாவின் முகம் துடித்துக் கொண்டிருந்தது. ஓடி வந்து மகளை அணைத்துக் கொண்டாள்.

''அம்மா....இது ஏம்மா? ஏன்?... எனக்கு மட்டும்... ஏன்?''

எத்தனையாவது தடவையாய் இந்தக் கேள்வி!

ஏன்?ஏன்?

''சாரும்மா, இந்த 'ஏனு'க்குப் பதில் தெரிஞ்சிட்டா நாமெல்லாரும் கடவுள் ஆயிடுவோம்.''

தாபத்துடன் மகளைத் தடவிக் கொடுக்கத்தான் முடிந்தது.

சாரதா தாயின் அணைப்பிலிருந்து விலகி உட்கார்ந்தாள்.

''எனக்கு ஒண்ணுமில்லேம்மா. நீ போ.''

''சூடா டிபன் அனுப்பறேன். அதுவரை கொஞ்சநேரம் படுத்துக்க சாரு.''

''சரளா கிட்ட அனுப்பாதே.''

**மா**நிற முகத்தின்மீது கருட்டைக் கூந்தல் இழை நெளிந்து நீண்ட கண்ணில் பட்டு உரசியபோது, அதை விரல் நுனியால் ஒதுக்கிக் கொண்டாள் சரளா. கண்ணாடியில் முகம் பார்த்து ஸ்டிக்கர் பொட்டைச் சரிசெய்து கொண்டாள். சிவப்பு நைலக்ஸ் சேலைக் கொசுவங்களை இடது தோள் மீது அழகாய் அடுக்கித் தொங்க விட்டபின், தோல் பையின் வாரை வலது தோள் மீதாக மாட்டிக் கொண்டாள். செதுக்கி வைத்தாற் போன்ற நேர்த்தியான பாதங்களைச் செருப்புகளில் நுழைத்துக் கொண்டாள்.

''போய்ட்டு வரேம்மா.''

திரும்பியவளின் நீண்ட கண்கள் அறைக்கு வெளியில் நாற்காலியிலிருந்து வெறித்துக் கொண்டிருந்த நீண்ட கண்களைச் சந்தித்தன. ஒரு கணம் தயங்கினாள். பிறகு- ''வரேன் சாரு.''

சாரதா பதில் சொல்லவில்லை. சரசர வென்று கடந்துபோகும் நூற்றறுபது செண்டிமீட்டர் உயர வடிவத்தையே மறையும் வரை பார்வையால் தொடர்ந்தாள். சரசரவென்று கடந்து போகும் கால்கள்.

ஆர்.சூடாமணி

கால்கள் என்பது பன்மை.

இந்த உருவமும் நூற்றறுபது செண்டி மீட்டர் உயரம்தான், எழுந்து நின்றால். நிற்க முடிந்தால், முடிந்த காலத்தில்.

இப்போதும் உறுப்புகளின் ஒற்றுமை. கண்ணாடிப் பிரதிபிம்ப ஒற்றுமை. ஆனால் ஓர் உருவம் நிற்கிறது. இன்னொன்று உட்கார்ந்திருக்கிறது.

இந்தக் கண்ணாடி பொய்! இந்தக் கோணல் கண்ணாடி உண்மையைச் சிதைக்கிறது!

பரபரவென்று விரையும் சக்கரங்கள்.

நிலைக் கண்ணாடி பிரதிபலிக்கும் ஒற்றுமையுடன் ஆஸ்பத்திரி அறை. நினைவில் எழும் அறை.

''ரெட்டைப் பெண்ணுங்களாம். ஒரே அச்சு! இந்தம்மா விபத்துக்கு முன்னால எப்படி இருந்திருப்பாங்கன்னு அந்தம்மாவைப் பார்த்துத் தெரிஞ்சுக்கலாம்.''

ஒவ்வொரு நர்ஸின் நாவிலும் அதே சொற்கள். ஒவ்வொரு பார்வையாளர் கண்களிலும் அதே வியப்பு.

''ஒரே சமயத்தில் நீங்க கட்டிலிலும் படுத்துக்கிட்டு அதன் பக்கத்திலும் நிக்கற மாதிரி இருக்கு, மிஸ் சாரதா!''

இந்த சரளாவை ஆஸ்பத்திரிக்கு வராதே என்றால் கேட்டால் தானே?

''என்ன இது சாரு? அவளுக்கு மட்டும் உன்னைப் பத்தி வருத்தமும் கவலையும் இருக்காதா? வந்து பார்க்கணும்னு பதைக்காதா?'' என்று அம்மாவின் வக்காலத்து வேறு.

அடுத்த முறை சரளா வந்து ''ஹௌ ஆர் யு ஃபீலிங் டுடே சாரு?'' என்றபோது, கட்டில் பக்கத்தில் மேஜை மீதிருந்த தண்ணீர் ஜாடியை எடுத்து, தற்செயலாய் விழுந்ததுபோல் அவள் கால்களை நோக்கி விட்டெறிந்தாள்.

இந்நேரம் சரளா தேனாம்பேட்டையில் தன் வேலைக் களத்தை அடைந்திருப்பாள்.

இவளும்தான். மணி காலை ஒன்பதரை ஆகவில்லையா? புதன் கிழமை. அண்ணா நகர் பள்ளியில் ப்ளஸ் ஒன் மாணவர்களுக்குப் பொருளாதாரப் பாடம் நடத்திக் கொண்டிருப்பாள்.

அடிவயிற்றிலிருந்து என்னவோ கருண்டெழுந்து மார்பை அடைத்தது.

அப்பா அடிக்கடி சொல்வாரே!'' என் ரெண்டு பெண்களையும் ஒரேமாதிரி வளர்த்துப் படிக்க வச்சு ஆளாக்கிட்டேன். ஒருத்தி எம்.ஏ.க்குப் பிறகு செக்ரடேரியல் கோர்ஸ் பண்ணித் தனியார் கம்பெனியில் ஸ்டெனோ. இன்னொருத்தி எம்.ஏ.க்குப் பிறகு பி.எட். பண்ணி அரசுப் பள்ளியில் டீச்சர். இனி எங்களுக்கு அவங்களைப்

பத்திக் கவலையில்லை. ரெண்டு பேரும் தன் கால்களில் நிக்கறவங்க.''

அவள் பல்லைக் கடித்துக் கொண்டு ஜன்னல் கதவை ஓங்கி அறைந்து மூடினாள். கண்ணாடி நொறுங்கித் தூள்கள் கீழே சிதறின. தரையெங்கும் சில்லச் சில்லக் கண்ணாடிப் பளபளப்புகள். மழைத் துளிகள் போல. சர்க்கரை சிந்தியதுபோல.

''என்ன சத்தம் அது? அம்மா பதைப் புடன் வந்தாள். ''என்ன சாரு?''

''ஜன்னல் கண்ணாடி உடைந்தது. வேறொண்ணுமில்லே.''

''காலில் கீலில் விழுந்து காயம் படலையே?''

''இன்னும் காலில் என்ன காயம் படணுமக்கறே?''

''முருகா... போகுது, சாப்பிட வரியா? இல்லாட்டி இங்கயே கொண்டு வரட் டுமா?''

''என்ன அவசரம்? இப்போ அள்ளிப் போட்டுக்கிட்டு எந்த வேலைக்கு நான் ஓடணும்?''

தாயின் கை அனுதாபத்துடன் அவள் தோள்மேல் படிந்தது. அவள் உதறித் தள்ளி னாள்.

''இப்போ முழுச் சம்பளத்தில் லீவு. இன்னும் ஒரு மாசம் போனா அரைச் சம் பளம். அப்புறம்...''

''நீ கட்டாயம் மறுபடியும் வேலைக் குப் போவே சாரு. கொஞ்சம் கொஞ்சமாய் க்ரட்சஸ், அப்புறம் செயற்கை உறுப்பு...''

''அம்மா ஒண்ணு தெரியுமா? அந்தச் சுற்றுலா கல்வி ரீதியாய் மாணவர்களுக் காகப் போனதால் அப்போ நேர்ந்த விபத் துக்கு நஷ்ட ஈடாய் ஸ்கூல் எனக்கு ஐம்பதா யிரம் தரப்போகுதாம். நேத்து வந்திருந்த பிரின்ஸிபல் சொன்னாங்க. என் காலின் விலை ஐம்பதாயிரம் ரூபாய்ன்னு உனக்குத் தெரியுமா?''

இரவும் பகலும் பெற்றோர் ரகசியமாய் அழுகிறார்கள். ஆனால் இவள் இப்படி ஏதாவது பேசும்போது துக்கம் அழுகை யைத் தாண்டிப் போய் விடுகிறது.

சாரதா குனிந்து தன் சேலைக் கொசுவங்களுக்குக் கீழே பார்த்தாள். இடது பாதம் ஒரு தேர்ந்த கலைஞன் மாதிரத்தில் செதுக்கி வைத்த நேர்த்தியான சிற்பம் போல் காட்சியளித்தது.

மென்மையாய்க் கேட்டாள்.

''சரளாவின் காலுக்கு என்ன விலை இருக்கும்மா?''

அம்மாவின் இயலாமை ஆத்திரமாய் வெடித்தது.

''சரளாவை மறக்க முடியாதா உன் னால?''

**ச**ரளாவாலும் இவளை மறக்க முடியவில்லை என்பது அடுத்த மாதம்

புலனாயிற்று.

வெளி வராந்தாவில் வானத்தை நிமிர்ந்து பார்த்து, மரக்கிளைகளில் சிறைப் பட்ட பிறை நிலாவில் மனத்தை இறக்க முயன்று கொண்டிருந்தபோது,

''சாரு!''

அந்தக் குரலைக் கேட்டதுமே உடம்பு விறைத்துக் கொண்டது. கண் மட்டத்தில் சரளாவின் நீலப் புடைவையின் கொசுவங் களும் அவற்றுக்குக் கீழே இரண்டு நேர்த்தி யான மாநிறப் பாதங்களும் தெரிந்தன. நிமிர்ந்து பாராமல் நாற்காலியைத் திருப்பிக் கொண்டு உள்ளே விரைய ஆரம்பித்தாள்.

''நில்லு சாரு!''

நிற்கவில்லை. மேலே செல்ல முனைந்தபோது சரளாவின் கைகள் நாற் காலியின் முதுகைப் பற்றி நிறுத்தின.

''நில்லுன்னு சொன்னேனில்ல?''

''போகவிடு சரளா.''

''உன்னோடு கொஞ்சம் பேசணும்.''

''எனக்கெதுவும் பேசவேணாம். நாற் காலியை விடு.''

சரளா விட்டாள். அவள் சொற்கள் மட்டும் நாற்காலியைத் தொடர்ந்து வந்தன.

''நான் மெட்ராஸை விட்டுப்போ றேன். என்னைப் பார்த்து சகிக்கக்கிற அவஸ்தை இனி உனக்கு இருக்காது.''

நாற்காலி நின்றது. பிறகு மெல்லத் திரும்பியது. சரளா ஒரு மோடாவை எடுத்து அவளெதிரே போட்டுக் கொண்டு அமர்ந் தாள். சகோதரிகளின் கண்கள் நேருக்குநேர் சந்தித்தன. எதிரெதிரே முகங்கள். சீரான கண்ணாடிப் பிரதிபிம்பம்.

அவளை இப்படிக் கண்ணோடு கண் சேர்த்து நோக்கி எத்தனை காலமாயிற்று என்ற எண்ணம் சாரதாவின் மனத்தில் ஓடி யது. விபத்து நடந்து மூன்றரை மாதங்கள் தானா ஆகியிருந்தன? மூன்றரை யுகங்க ளாய் இவளைப் பார்க்கப் பிடிக்காமலாகி விட்டது. இவள் வீட்டிலிருக்கும் நேரங் களில் சாரதா தன் அறையை விட்டு வருவ தில்லை. இவள் சாப்பிட்டு அலுவலகம் போன பிறகே சாரதா சாப்பிட வருகிறாள். இரவு உணவு இவள் பெற்றோருடன் சேர்ந்து உண்ணு முன்பே சாரதாவுக்குச் சாப் பாடு அவள் அறைக்கு வந்து விட வேண் டும்.

''எவ்வளவு நாளுக்கு நாம் இப்படியே கண்ணாமூச்சி ஆடிக்கிட்டிருக்க முடியும் சாரு?''

சாரதா திடுக்கிட்டாள், அவள் மனச் சொற்களுக்கு சரளா குரல் கொடுத்தபோது.

''அதனால்தான் நான் தீர்மானம் பண்ணிட்டேன். இந்த நிலைமை இனியும் தொடர வேணாம்னு. தொடராமலிருக்கறது உனக்கு மட்டுமில்லே, எனக்கும் நிம்மதி தான். உன்னைப் பார்க்கற போதெல்லாம் என் உடம்பு பதைக்குது. அது உனக்குப் புரியலே.''

''புரியாம என்ன! ஒரு ஊனக்காரியைப் பார்த்துக்கிட்டே இருக்கறதுன்னா வெறுப் பாய்த்தான் இருக்கும்.''

சரளா அவளை ஆழமாய் நோக்கினாள். ''ஊனம் உன் மனசை உன் உடம்புக்குள் சிறைப்படுத்திவிடக் கூடாது சாரு.''

''அட்வைஸ் குடுக்கறயாக்கும்! அக்கா இல்லையா? ரெண்டு நிமிஷம் பெரிய அக்கா!'' சரளா எட்டி அவள் கையைத் தொட வந்தாள். சாரதா கையை விலக்கிக் கொண்டாள்.

''என்னமோ மெட்ராஸை விட்டுப் போகப் போறதாய்ச் சொன்னியே?''

''ஆமாம்'' எங்க கம்பெனியின் திருச்சிக் கிளையிலேர்ந்து ஒரு ஸ்டெனோ மெட்ராஸுக்கு மாற்றல் கேட்டிருந்தார். அவர் இடத்தில் திருச்சிக்கு நான் போறதாய் வாலன்ட்டியர் பண்ணினேன். எங்க ரெண்டு பேருக்கும் இந்தப் பரிமாற்றத்துக்கு அனுமதி கிடைச்சிடிச்சு.''

சாரதா பேசவில்லை.

''ரெண்டு வருஷம் நான் திருச்சியில் இருப்பேன். நடுவில் வரமாட்டேன். அப்பா அம்மா கிட்டயும், அவங்களுக்கு என்னைப் பார்க்கணும்னா அங்கே வர ணும்னு சொல்லிட்டேன். ரெண்டு வருஷத் துக்கு உன் கண்களுக்கு என்கிட்டேருந்து விடுதலை.''

சரளா நிறுத்தினாள். மறுபடி பேசிய போது குரல் தாழ்வாக, ஒரு மெல்லிய நடுக் கத்துடன் வந்தது.

''ரெண்டு வருஷம் கழிச்சு நான் உன்னைப் பார்க்க வரபோது நீ ஜெய்ப்பூர் காலோடு வாசலில் நின்னு சிரிச்ச முகமாய் என்னை 'வா'ன்னு கூப்பிடுவேன்னு நம்ப றேன்.''

சரளா எழுந்து கொண்டாள். ''நாளை ராத்திரி ஊருக்குக் கிளம்பறேன். குட் நைட் சாரு.''

சாரதா அசையாமல் உட்கார்ந்திருந் தாள். சுய வெறுப்பின் திடீர்த் தாக்கலில் கணநேரம் ஆடிப் போய், உடனே சமாளித் துக் கொண்டாள். கண்களில் உறுத்திய கசிவை இமைகள் கொட்டி அடக்கினாள்.

''சரள்!''

நின்று திரும்பிய சரளாவின் முகத்தில் வியப்பு. ''என்ன சாரு?''

''தாங்ஸ்.''

சாரதா சக்கர நாற்காலியைத் தன் அறையை நோக்கிச் செலுத்தினாள்.



# கேப்டன்

ஆசிரியர் ஐயா சமூகத்துக்கு,

வணக்கமுங்க. நீங்க நல்லாத்தான் இருப்பீங்க. இருக்கறவன் உசுரத்தான் வாங்குவீங்க. ஐயா, தெரியாமத்தான் கேக்கறேன். ஆயுள் தண்டனை கைதிங்களையெல்லாம் மன்னிச்சி விடுதலை பண்றாங்க, நாட்ல. அப்பிடி என்னய்யா நான் பாவம் பண்ணிட்டேன்னு இப்படி ஒரு தண்டனை தந்தீங்க? நேத்துப் பார்த்த படத்தைப் பத்தித்தாங்க சொல்றேன். கைல டிக்கெட்டைக் கொடுத்து, 'படத்தைப் பார்த்து உனக்குத் தோணுறதை எழுதுன்னு சொல்லிட்டீங்களா, எனக்கும் மஜாவா இருந்துச்சுங்க. டைட்டிலைப் பார்த்து, சர்தான், ஏதானா மெடல் வாங்கின வீரனின் கதையா இருக்கும்னு நெனச்சு நெஞ்ச நிமிர்த்தி உள்ளே போனா, அது என்னங்க! மிலிட்டரி ஓட்டல் சமாசாரங்க. அடி, ஒதை, வெடிகுண்டு, கொலை அது, இதுன்னு பயங்கர ரப்சருங்க. புதுசா ஒண்ணும் இல்லைன்றது ஒரு பக்கம் கெடக்கட்டும்; இருக்கறதே இன்னான்னு புரியலீங்க.

பாடர்லேர்ந்து, ஒரு மிலிட்டரிக்காரன் தப்பிச்சி ஊருக்குக் குதிரை ஏறி ஓடியாறானாம். அவனைத் தொரத்திக்கினு வர்றவங்களால புடிக்க முடியலியாம். மெய்யாத்தான் கேக்கறேன், பாத யாத்திரையா நடத்தறாங்க? இது தேவலைங்க. மிலிட்டரிக்காரனை - லாக்கப்புல வெக்கறாங்க. கோர்ட்டுக்கு இஸ்க்கிறாங்க, வெலங்கு போடறாங்க... சுடறதுக்கு உத்தரவு குடுக்கறாங்க... யாரு? போலிஸ்! நாறு வுட அவலே இல்லீங்களா?

சர்தான், அதுவும் போவட்டும். ஒரு வழியா பாத யாத்திரை முடிச்சி மிலிட்டரிக்காரங்க நம்ம ஈரோவைக் கண்டுபிடிக்கறாங்களே, 'வணக்கம்' போட சொல்ல... அப்ப நடக்குது பாருங்க ஒரு கூத்து! நாலு வயசு பாப்பா கூட எழுந்து நின்னு கிண்டல் பண்ணுதுங்க 'நேட்டு'ல.

'ரைட்டரு', தெலுங்குல பெரியாளாமில்ல? அடி வயத்தப் புடிச்சிக்கினு சிரிக்கத் தோணுதுங்க! சொல்லுவாங்களே... இன்னா அது...? ஆங், வாழிக்கு! யாருனாக்கும் இதுக்கு அர்த்தம் சொல்லணுங்க - அந்தாளுகிட்ட.

அவுர வுடுங்க... வெளியூர்க்காரரு. நம்ம கவிஞரு... வைரமுத்து... இன்னா ஆச்சிங்க அவருக்கு? பாட்டுங்களா அது? பாடாவதி கேஸுங்க!

கோடிக்கணக்குல பணத்தைப் போட்டு, இப்பிடிக் கண்றாவிங்களை எடுக்கறவங்களைக் கூட மன்னிச்சிறலாங்க. ஒரு பாவமும் அறியாத என்னை இப்படியெல்லாம் படம் பாக்க வெச்சி சோதிக்கறீங்களே... உங்களைத்தாங்க மன்னிக்கத் தோண மாட்டேங்குது!

- ஆர். பி. ஆர்.



"ஆமாம், நல்லான்! போகலாம்னுதான் உத்தேசம் பண்ணியிருக்கேன். நாவே உங்கிட்ட சொல்லணும்னு இருந்தேன். அதுக்குள்ளே நீயே கேட்டுட்டே!" என்று சாஸ்திரி சாந்தமாகப் பதில் கூறினார்.

"அது ஏனுங்க அப்படி? எங்க மேலே ஏதாவது கோபங்களா, சாமி" என்று நல்லான் இன்னும் ஆத்திரத்துடன் கேட்டான்.

"கோபமா? உங்க மேலே எனக்குக் கோபமா? உங்க மேலே நான் கோவிச்சுண்டேன்னா, எனக்கு விமோசனமே கிடையாது, அப்பா!"

"பின்னே ஏன் போறேங்கறீங்க, சொல்லுங்க" என்றான் நல்லானின் மச்சான்.

"நிர்க்கதியாய், கையிலே ஒரு குழந்தையையும் தூக்கிக் கொண்டு வந்த என்னை வைத்து ஆதரித்தீர்கள். நீங்கள் எனக்குச் செய்திருக்கிற ஒத்தாசைக்கு, தோலைச் செருப்பாத் தைத்துப் போடணும் என்பார்களே, அந்த மாதிரி செய்தால் கூட ஈடாகாது..."

"சாமி! சாமி! அந்த மாதிரியெல்லாம் சொல்லாதீங்க" என்று நல்லான் காதைப் பொத்திக் கொண்டான்.

"நான் குப்பத்தை விட்டுப் போகிறதென்கிறது வேறு காரியத்துக்காக" என்றார் சாஸ்திரி.

"அது என்னங்க, அப்படிப்பட்ட காரியம்? அதையுந்தான் சொல்லுங்களேன்!" என்றான் நல்லானுடன் வந்தவர்களில் ஒருவன்.

"ஆகா, சொல்கிறேன், இந்தத் தேசத்திலே இப்போது மகா ஆச்சரியமான காரியமெல்லாம் நடந்து வருகிறதே, உங்களுக்குத் தெரியுமோ இல்லையோ? பாரத தேசம் அடியோடு விழுந்துவிட்டது. இனிமேல் அதற்கு மோட்சமே கிடையாது என்று அநேகம் பேர் எண்ணியிருந்தார்கள். அந்தச் சமயத்தில் மகாத்மா காந்தின்னு ஒரு பெரியவர் கிளம்பி, மகா அற்புதங்களையெல்லாம் செய்து வருகிறார். அவரால் தேசமெல்லாம் ஒரு புதிய சக்தி - ஒரு புதிய ஆவேசம் - ஏற்பட்டிருக்கிறது. என்றும் நடக்காத காரியமெல்லாம் நடந்து வருகிறது. ஆயிரக் கணக்கான ஜனங்கள் தங்கள் சொந்தக் காரியங்களையெல்லாம் விட்டுத் தேசத்துக்காக உழைத்து வருகிறார்கள். எத்தனையோ பேர் தங்கள் உடல் பொருள் ஆவியைத் தத்தம் செய்திருக்கிறார்கள். இப்படிப்பட்ட சமயத்தில், இராமருடைய பாலத்துக்கு அணிற்பிள்ளை மணலை உதிர்த்தது போல, என்னாலான தேச சேவையை நானும் செய்ய உத்தேசித்திருக்கிறேன், பெரிய காரியம் ஒன்றும் என்னால் செய்ய முடியாது. ஆனால், ஊர் ஊராய்ப் பஜனை செய்து கொண்டு போவேன். கள்ளை ஒழியுங்கள், கதரை உடுத்துங்கள், சுத்தமாயிருங்கள், என் சாதி பெரிது உன் சாதி பெரிது என்றெல்லாம் சண்டை போடாதீர்கள் என்று போதிப்பேன். ஆனால், நான் எங்கே போனாலும் என்ன செய்தாலும் உங்களை மட்டும் மறக்க மாட்டேன், நல்லான்!

# தியாக பூமி



நீங்கள் இந்தச் சாவடிக் குப்பத்தில் செய்திருப்பதை நான் போகுமிடங்களிலெல்லாம் உதாரணமாய் எடுத்துச் சொல்லப் போகிறேன்.''

சாஸ்திரியார் உருக்கத்துடன் செய்த இந்தப் பெரிய பிரசங்கத்தைப் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்தார்கள் நல்லானும் அவனுடைய தோழர்களும். அது முடிந்ததும், நல்லான், ''அதெல்லாம் சரிதானுங்க. ஆனால், இந்தக் குப்பத்தை விட்டுப் போற பேச்சை மட்டும் மறந்துடுங்க. இங்கேயே இருந்துக்கிட்டு, என்னென்ன தேச சேவை செய்யணுமோ, செய்யுங்க. நாங்களும் செய்யறோம்'' என்றான்.

''இந்த வயசிலே நீங்களாவது, ஊர் ஊரா நடந்து போகவாவது, சாமி; அதெல்லாம் நடக்காத காரியங்க'' என்றான் நல்லானின் மைத்துனன்.

''நீங்க போயிட்டா, எங்க பஜனையெல்லாம் என்னமாய்ப் போறதுங்க'' என்று ஒருவன் கேட்டான்.

''அதெல்லாம் முடியாது, சாமி! உங்களை விடவே மாட்டோம். மீறிக் கிளம்பினால் குறுக்கே விழுந்து மறிப்போம்'' என்றான் இன்னொருவன்.

''சத்தியாக்கிரஹம் பண்ணுவோம்'' என்றான் நல்லான்.

சம்பு சாஸ்திரி புன்னகையுடன், ''சத்தியாக்கிரஹம் என்பது ரொம்பவும் சக்தி வாய்ந்த ஆயுதம், அப்பா! அதை யார் வேணுமானாலும் எந்தக் காரியத்துக்கு வேண்டுமானாலும் உபயோகித்து விட முடியாது. தவறுதலாக உபயோகித்தால் அது சத்தியாகிரஹம் அல்ல; துராக்கிரஹம்'' என்றார்.

## 45. 'வஸந்த விஹாரம்'

உமா தேவியின் இருதய அந்தரங்கத்தில் இத்தனை நாளும் பொங்கித் ததும்பிக் கொண்டிருந்த அன்பின் வெள்ளம் இப்போது கரை புரண்டோடத் தொடங்கியது. அந்தப் பிரவாகத்தில் அகப்பட்டுக் கொண்ட சாரு திக்குமுக்காடிப் போனாள்.

ஆறு வருஷமாகக் குழந்தையை கைவிட்டிருந்ததற்கெல்லாம் இப்போது உமா ஒரேயடியாக ஈடு செய்யலானாள். சாருவுக்கு வித விதமான விலையுயர்ந்த உடைகளை வாங்கிக் குவித்தாள். பாதாதிகேசம் வைர நகைகளாக வைத்து இழைத்தாள். தினம் மூன்று தடவையாவது குழந்தைக்குப் புதுப் புது அலங்காரம் செய்தாலொழிய அவளுக்குத் திருப்தி உண்டாவதில்லை.

முதல் தடவை இம்மாதிரி அலங்காரம் செய்து விட்டபோது, சாரு, ''மாமி! மாமி! தத்ரூபமாய் டிராமாவிலே வேஷம் போட்டுண்டாப்பலேயே இருக்கே! இதற்கு என்ன வேஷம் என்று பேரு?'' என்று கேட்டாள்.

இப்படியெல்லாம் பளபளப்பாக அலங்கரித்துக் கொள்வது டிராமாவில்தான் என்பது குழந்தையின் எண்ணம். உமாவுக்கு இந்தக் கேள்வி ரொம்ப வேடிக்கையாயிருந்தது. அவள் புன்னகையுடன், ''இது என்ன வேஷம்னா கேக்கறே? இதற்குச் சாவித்திரி பொண் வேஷம்னு பேரு'' என்றாள், அப்போது சாரு, ''சாவித்திரி பொண்ணா? சாவித்திரி சத்தியவான் கதை எனக்குத் தெரியும். ஆனால், சாவித்திரிக்கு ஒரு பொண்ணு இருந்ததா, என்ன?'' என்று கேட்டாள். ''ஆமாம், இருந்தது; அந்தக் கதையை உனக்கு இன்னொரு நாளைக்குச் சொல்கிறேன்'' என்றாள் உமா.

சாருவுக்கு அலங்காரம்

## அருள்வாக்கு

**ம**நு முதலான மஹா பெரியவர்கள் ஸகல மக்களுக்கும் அஹிம்ஸை, ஸத்யம், திருடாமை, தூய்மை, புலனடக்கம் என்ற ஐந்து உயர்ந்த பண்புகள் இருக்க வேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். இந்த ஐந்தையும் நாசம் பண்ணுவதாக ஆசை என்பது இருக்கிறது.

ஹிம்ஸை ஏன் செய்கிறோம்? நாம் ஸத்தில் உள்ள ஆசையினால். இன்னொருத்தனிடமுள்ள ஒரு பொருளில் நமக்கு ஏற்படும் ஆசையால் அவனை ஹிம்ஸித்தாவது அதைப் பெறப் பார்க்கிறோம்.

ஸத்யத்தை ஏன் விடுகிறோம்? ஆசை வைத்ததைச் ஸத்யமான முறையில் போய் அடைய முடியாது என்பதால்தான் இப்படிச் செய்கிறோம். நம்மைக் காப்பாற்றிக்

செய்து பார்ப்பதுடன் உமா திருப்தியடைந்து மகிழ்ந்து விடவில்லை. அவளுடைய படிப்பையும் கவனித்தாள். சென்னையில் மிகவும் பிரசித்தி வாய்ந்த கான்வென்ட் ஸ்கூலுக்கு அவளை அனுப்பினாள். வீட்டில் அவளுக்குப் பாடஞ் சொல்லிக் கொடுக்க வெள்ளைக்காரி ஒருத்தியை ஏற்பாடு செய்தாள்.

பங்களாவில் சாருவுக்கென்று ஒருதனி அறை. குழந்தை உட்கார்ந்து படிக்கவும் புத்தகங்கள் வைத்துக் கொள்ளவும் மேஜை நாற்காலி பீரோக்கள் மட்டும் 500 ரூபாய்க்கு வாங்கப்பட்டன.

சாருவுக்காக வாங்கிய விளையாட்டுச் சாமான்கள் நூறு குழந்தைகள் விளையாடுவதற்குப் போதுமானவை. சென்னைக் கடைகளில் எத்தனை விதமான பொம்மைகள் உண்டோ, அவ்வளவும் வந்துவிட்டன. அந்தப் பொம்மைகளுக்கு உடைகள் தைப்பதற்கே ஒரு தையற்காரனுக்கு வேலை சரியாக இருந்தது.

பொம்மைக் குதிரையில் ஏறிக் குழந்தை சந்தோஷமாக விளையாடுவதைப் பார்த்த உமாவுக்கு, நிஜக் குதிரையே வாங்கிக் கொடுக்க வேண்டுமென்று தோன்றிற்று. அவ்வளவுதான்; மறு நாளைக்கு மட்டக் குதிரை ஒன்று வந்துவிட்டது. பெயர்தான் மட்டக் குதிரையே தவிர, விலையில் மட்டமல்ல; 1200 ரூபாய்! சாரு அன்று முதல் குதிரைச் சவாரி கற்றுக் கொள்ளத் தொடங்கினாள்.

சாரு ஒவ்வொரு விதத்திலும் சாவடிக் குப்பத்தில் இருந்ததைவிடத் தன்னிடம் மேன்மை பெற வேண்டும் என்று உமா எண்ணினாள். பாக்கி எல்லாவற்றிலும் இந்த நோக்கம் நிறைவேறிற்று. ஆனால், குழந்தையின் நாட்டியத் திறமையைப் பற்றி என்ன? அதை முன்னைக் காட்டிலும் மேன்மை பெறச் செய்வதற்குத் தன்னால் என்ன செய்ய முடியும்? - இந்த எண்ணம் உமாவுக்குச் சங்கடத்தை அளித்தது. சாவடிக் குப்பம் பள்ளிக்கூடத்தில் குழந்தைக்கு நாட்டியம் கற்றுக் கொடுத்த வாத்தியார் அம்மாள்மீது உமாவுக்குப் பொறாமைகூட உண்டாயிற்று. கடைசியாக, அதற்கும் ஒரு யோசனை கண்டு பிடித்தாள். பரத நாட்டியமாவது, ராதா-கிருஷ்ண நடனமாவது? அதெல்லாம் தோற்றுப் போகும் படியாகக் குழந்தைக்கு இங்கிலீஷ் டான்ஸ் சொல்லிக் கொடுக்கத் தீர்மானித்தாள் உமா.

**சா**ருவின் மனோநிலை எப்படியிருந்தது? உமா ராணியின் பங்களாவில் அவள் தொடங்கிய புதிய வாழ்க்கை அவளுக்கு சந்தோஷமாயிருந்ததா? சாவடிக்குப்பத்தைக் காட்டிலும் 'வஸந்த விஹாரம்' அவளுக்கு அதிகம் பிடித்திருந்ததா? வெளித் தோற்றத்தைப் பொறுத்த வரையில் அப்படித்தான் காணப்பட்டது. புதிய வீட்டில் அவள் கண்ட புதுமைகள் எல்லாம் குழந்தைக்கு மிகுந்த உற்சாகத்தை அளித்தன.

காலையில் எழுந்ததும், தான் படுத்திருந்த வெல்வெட் மெத்தையையும் தலையணைகளையும் சாரு கையினால் தடவித் தடவிப் பார்ப்பாள். பெரிய நிலைக்கண்ணாடிக்கு முன்னால் நின்று, தான் செய்யும் சேஷ்டைகளைப் போலவே தன்னுடைய பிரதி பிம்பமும் செய்வதைக் கண்டு சிரிப்பாள். குளிக்கும் அறையில், 'ஷவர் பாத்'தைத் திறந்துவிட்டு, அதிலிருந்து சலசலவென்று ஜலம் கொட்டுவதைப் பார்ப்பதில் அவளுக்கு அளவிலாத ஆனந்தம். எதிர்பாராதபோது தன் மேலேயே அப்படிப் பொழிய ஆரம்பித்து விட்டால், விழுந்து விழுந்து சிரிப்பாள்.

மேஜையின் மேல் சாப்பாடு கொண்டு வந்து வைப்பதும், ஸ்பூனினால் எடுத்துச் சாப்பிடுவதும் அவளுக்கு ரொம்ப வேடிக்கை. மோட்டார்ச் சவாரி, குதிரை ஏற்றம் எல்லாம் அவளுக்கு ரொம்பவும் பிடித்திருந்தன.

முதலில் ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் குழந்தை அதிருப்தி தெரிவித்தாள். கான்வெண்ட் ஸ்கூலுக்குப் போய் வந்த அன்று, உமா அவளை, "குழந்தை! புதுப் பள்ளிக்கூடம் எப்படியம்மா இருக்கு? உனக்குப் புடிச்சிருக்கா?" என்று கேட்டாள்.

"புடிக்காமல் என்ன? புடிக்கத்தான் இருக்கு. ஆனாக்கே..."

"ஆனாக்கே, என்ன?"

"எங்க பள்ளிக்கூடம் மாதிரி ஆகாது" என்றாள் சாரு.

உமா சிரித்துக் கொண்டே, "இப்ப அப்படித்தான் இருக்கும். கொஞ்ச நாள் போனால், கான்வெண்ட் ஸ்கூலும் சாவடிக்

கொள்ள வேண்டும்; நம்முடைய சொத்து, நம்முடைய அந்தஸ்து, மானம் போன்ற எதுவோ ஒன்றைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்ற ஆசைக்காகத் தான் பேசுகிற பொய்யெல்லாம்; பண்ணுகிற மோசடியெல்லாம்.

பொருளிடத்திலுள்ள ஆசையால்தான் திருடுவது என்பதை விளக்க வேண்டிய அவசியமில்லை.

ஆசார சுத்தியைவிட்டு விடுவது, 'மனஸ் போனபடி ஸௌகர்யங்களை அநுபவிக்க வேண்டும்' என்ற ஆசையினால் தான்.

புலனடக்கம் போவது ஆசையால் தான் என்பதைச் சொல்லவே வேண்டாம்.

அதாவது மநு சொன்ன ஐந்து பெரிய தர்மங்களையும் மீறப் பண்ணுவது ஆசைதான்.



அறுபகைக்கு மூலம், ஐந்து தர்மங்களையும் நிர்மூலம் செய்வதற்கும் காரணம்-என்றிப்படி ஸகல தோஷங்களுக்கும் பிறப்பிடமாக இருப்பது ஆசைதான்.

-ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

குப்பம் பள்ளிக்கூடம் மாதிரி பிடிக்கப் போயிடும்'' என்றாள்.

மாமி பரிகாசம் பண்ணுகிறாள் என்பதைச் சாரு தெரிந்து கொண்டு, ''நெஜமாகத்தான் சொல்றேன், மாமி! எங்க பள்ளிக்கூடம் ரொம்ப நல்ல பள்ளிக்கூடம்'' என்றாள்.

''உங்க பள்ளிக்கூடத்து ஹெட் மிஸ்ட்ரஸ் ரொம்பப் பொல்லாதவள், உன்னைக்கூடப் பிரம்பாலே அடிச்சிருக்கான்னு சொன்னயே?'' என்று உமா கேட்டாள்.

''ஆனா, எங்க கிளாஸ் டீச்சர் ரொம்ப நல்லவராச்சே! அப்புறம், எங்க பள்ளிக்கூடத்துப் பசங்கள்ளாம் ரொம்ப நல்ல பசங்கள். தினம் நான் பள்ளிக்கூடத்துக்குப் போனதும் என்னைச் சுத்திண்டு, 'சாரு, ஒரு டான்ஸ் பண்ணு!' 'சாரு, ஒரு டான்ஸ் பண்ணு' அப்படின்னு நச்சரிக்குங்க. மாமி! நாங்க போட்ட டிராமாவிலே, ஒரு சின்னப் பையன் போலீஸ்காரன் வேஷம் போட்டுண்டு வந்தானே, அவனை உங்களுக்கு நினைவிருக்கோ? அவன் பேரு ரங்கன். என் மேலே அவனுக்கு ரொம்ப ஆசை!'' என்று சாரு பேசிக் கொண்டே இருந்தாள்.

உமா, ''சாரு, இன்னும் கொஞ்ச நாளிலே கான்வெண்ட் ஸ்கூல் பசங்களும் அந்த மாதிரி உன்கிட்டப் பிரியமாய்ப் போயிடுவா'' என்றாள்.

உமா சொன்னது உண்மையாயிற்று. சில நாளைக்குள் சாருவுக்குக் கான்வெண்ட் ஸ்கூலும் பிடித்துப் போய்விட்டது. ஆகவே, வெளிப் பார்வைக்கு அவள் உற்சாகமாகத்தான் இருந்தாள். குறை எதுவும் இருந்ததாகவே தெரியவில்லை. ஆனால், உண்மையிலோ, சாருவின் உள்ளத்தின் ஆழத்தில் ஒரு பெரிய ஏக்கம் குடிகொண்டு தான் இருந்தது. அது தாத்தாவைப் பற்றிய ஏக்கந்தான். எதிர்பாராத சமயங்களில் திடீரென்று குழந்தையின் இந்த மனக்குறை வெளியாகும். எதைப் பற்றியாவது பேசிக் கொண்டிருக்கும் போது சம்பந்தமில்லாமல், அவள், ''மாமி! தாத்தா ஏன் வரவேயில்லை?'' என்று கேட்பாள்.

''தாத்தாவா? அவர் ஏன் வரப் போறார், சாரு! யார் தலையிலே உன்னைக் கட்டலாம்னு யோசனை பண்ணிண்டிருந்தார்போல் இருக்கு. 'நான் வளர்க்கிறேன்' என்று சொன்னதும், எங்கிட்ட விட்டுட்டு அவர் பாட்டுக்குச் சௌக்கியமாயிருக்கார்'' என்பாள் உமா.

சாரு எப்போது தாத்தாவைப் பற்றிப் பிரஸ்தாபித்தாலும் உமா ஏதாவது காரமாகத்தான் பதில் சொல்வாள். ''உன் தாத்தா உன்னை வந்து பார்க்கிறதை நானா வேண்டாம்னு வழி மறிச்சிண்டிருக்கேன்? நீ இருக்கிற போதேதானே சொன்னேன், எப்ப வேணாலும் வந்து உங்க பேத்தியைப் பார்த்துட்டுப் போங்கோன்னு? அவர் வராட்டா என்னை என்ன பண்ணச் சொல்றே?'' என்பாள்.

மற்ற எல்லா விஷயங்களிலும் எவ்வளவோ அன்பாகவும், இனிமையாகவும் பேசும் உமா, தாத்தாவைப் பற்றிப் பேச்சு வந்தால் மட்டும் எரிந்து விழுவது சாருவுக்கு ஆச்சரியமாயிருந்தது. அதன் காரணம் ஒன்றும் அவளுக்குப் புரியவில்லை. இந்த மாதிரி நாலைந்து தடவை ஆனபிறகு, தாத்தாவைப் பற்றி மட்டும் மாமியிடம் பேசக் கூடாது என்று அவளுடைய மனத்திற்குள் தீர்மானித்துக் கொண்டாள்.

அந்தத் தாத்தா விஷயமாக உமாவின் மனம் எவ்வளவு சஞ்சலப்பட்டுக் கொண்டிருந்தது என்பது குழந்தைக்கு என்ன

தெரியும்? அவரை நினைக்கும்போதெல்லாம் ஒரு பக்கம் பக்தியும், மற்றொரு பக்கம் ஆத்திரமும் அவளுக்குப் பொங்கிக் கொண்டிருந்தது என்பதைக் குழந்தை என்ன கண்டாள்?

## 46. குருட்டுக் கிழவன்

ஒரு நாள் சாரு தான் கற்றுக்கொண்டிருந்த இங்கிலீஷ் நடனத்தை உமாராணிக்கு ஆடிக் காட்டிக் கொண்டிருந்தாள். உமா அதைப் பார்த்து மிகவும் சந்தோஷமடைந்து, 'இப்படிப்பட்ட குழந்தையைப் பெறுவதற்கு நாம் எவ்வளவு, பாக்கியம் செய்தோம்!' என்று எண்ணினாள். அதைத் தொடர்ந்து, 'இந்தப் பாக்கியம் நமக்கு நீடித்திருக்க வேண்டுமே? நம்முடைய ஜன்மம் துரதிர்ஷ்ட ஜன்மமாயிற்றே!' என்ற எண்ணம் உண்டாயிற்று.

அப்போது வாசலில், "அம்மா! கண்ணில்லாத கபோதி! ரெண்டு பிச்சை போடுங்கோ!" என்று ஒரு குரல் கேட்டது. அது ஒரு கிழவனுடைய குரல்; அதிலிருந்த நடுக்கம், கேட்பவர்களுடைய உள்ளத்தை உருக்குவதாயிருந்தது.

பிறகு, அந்தக் கிழவனின் குரலும் இன்னொரு சிறு பெண்ணின் குரலுமாகச் சேர்ந்து பாடும் சப்தம் கேட்கத் தொடங்கியது :

"தில்லையம்பல ஸ்தல மொன்றிருக்கு
தாம் - அதைக் கண்ட பேர்க்கு
ஜனனமரணப் பிணியைக் கருக்குதாம்."

சாரு ஆட்டத்தை நிறுத்திவிட்டு ஜன்னலோரமாகச் சென்று பார்த்தாள். அப்போது வாசல் 'கேட்'டுக்கு அருகில் ஒரு கிழவனும் ஒரு சிறு பெண்ணும் நின்று பாடுவது தெரிந்தது. சாரு பார்த்துக் கொண்டிருக்கும் போதே பங்களாவின் தர்வான் அங்கே வந்து, போ! போ!" என்று அவர்களை விரட்டினான். "மாமி! மாமி! இங்கே கருக்க வாங்கோ!" என்று அடித்துக் கொண்டாள் சாரு. உமா அவள் அருகில் வந்ததும், "மாமி! மாமி! அந்தக் கிழவனையும் பெண்ணையும் தர்வான் விரட்டுகிறான். ஐயையோ! அவா போறாளே! திரும்பி வரச் சொல்லுங்களேன்!" என்று சாரு கூவினாள்.

உமா, "நல்ல பொண்ணடி நீ!" என்று சொல்லிச் சிரித்து விட்டு, "தர்வான்! அவர்களைக் கூப்பிடு" என்று உத்தரவிட்டாள். தர்வான் ஓடிப் போய், "இந்தாங்க; இங்கே வாங்க. உங்க பாடு யோகந்தான்" என்றான். கிழவனும் பெண்ணும் திரும்பினார்கள். கிழவன் ஒரு கையில் கோல் ஊன்றிக் கொண்டிருந்தான். இன்னொரு கையை அந்தச் சிறுபெண் பிடித்துக் கொண்டு முன்னால் வர, கிழவன் பின் தொடர்ந்து வந்தான்.

"மாமி! அந்தப் பொண்ணு ஏன் அந்தக் கிழவன் கையைப் பிடிச்சுண்டே வர்றது?" என்று சாரு கேட்டாள்.

"உனக்குப் பார்த்தாத் தெரியலையா, என்ன? அந்தக் கிழவனுக்கு ரெண்டு கண்ணும் பொட்டை. அதனாலேதான் அந்தப் பொண் எங்கே போனாலும் அவன் கையைப் புடிச்சு அழைச்சுண்டே போறது" என்றாள் உமா.

"அதுதான் நானும் நெனைச்சேன். கண் பொட்டையாப் போனா ரொம்பக் கஷ்டமில்லையா, மாமி!" என்றாள் சாரு.

அதற்குள் கிழவனும் பெண்ணும் மறுபடியும் 'கேட்'டுக்குப் பக்கத்தில் வந்து நின்று,

"உயருஞ்சிகரக் கும்பம் தெரியுதாம் -
அதைப் பார்த்த பேர்க்கு
உள்ளங்குளிரக் கருணை புரியுதாம்!"

என்று பாடினார்கள். கண் தெரியாத ஒருவன் இந்த மாதிரி பாடியதால் அதனுடைய உருக்கம் அதிகமாயிற்று. நந்தனுக்கு, தூரத்தில் நின்று கோபுர சிகரத்தைக் காணலாமென்ற நம்பிக்கையாவது



இருந்தது. இந்தக் குருடனுக்கு அந்த நம்பிக்கைக்கும் இடமில்லையல்லவா? ஆகையால் பாட்டைக் கேட்டு உமாராணிக்குக் கண்ணில் ஜலம் வந்து விட்டது.

சாரு இதைக் கவனிக்கவில்லை. அவள் வெளியில் பார்த்த வண்ணமே, "மாமி! அந்தப் பெண்ணைப் பார்த்தா எனக்குப் புடிச்சிருக்கு. எவ்வளவு நன்னாப் பாடறது? அவளையும் நம்மாத்திலே கூப்பிட்டு வச்சக்கலாமா!" என்று கேட்டாள்.

இந்தக் கேள்வியினால், உமாவின் மனத்தில் ஏற்பட்டிருந்த உருக்கம் மறைந்து விட்டது. சிறிது கடுமையான குரலில், "ரொம்ப அழகாத்தானிருக்கு! தெருவோடு போகிற குழந்தைகளையெல்லாம் நாம் அழைச்சு வச்சக்கறதா, என்ன?" என்றாள்.

"என்னை மாத்திரம் அழைச்சு வச்சகண்டேளே?" என்று சாரு எதிர்பாராத விதமாய்க் கேட்டதும், உமா திகைத்துப் போனாள். குழந்தையைக் கட்டிக் கொண்டு, "நீ தெருவோடு போன குழந்தையா, சாரு?" என்றாள். அந்த நிமிஷத்தில் உமாவுக்கு, "என் கண்ணே! நான்தாண்டி உன் அம்மா! பத்து மாதம் நான் சுமந்து பெற்ற குழந்தையடி நீ!" என்று சொல்லிக் கதறவேண்டும்போல் இருந்தது. ஆனாலும், பல்லைக் கடித்துக் கொண்டு அந்த ஆவலை அடக்கிக் கொண்டாள். அசாத்திய சூடிகையாச்சே சாரு? "நான்தாண்டி உன் அம்மா!" என்றால், "இத்தனை நாளும் எங்கே போனே? ஏன் என்னை விட்டுட்டுப் போனே?" என்று ஆயிரம் கேள்வி கேட்பாளே? அதற்கெல்லாம் என்னமாய்ப் பதில் சொல்வது?

இதற்குள், வாசலில் நின்ற பிச்சைக்காரன் பாடுவதை நிறுத்தி, "அம்மா! கண்ணில்லாத கபோதி, அம்மா! ரெண்டு பிச்சை போடுங்கோ, அம்மா!" என்று கத்தினான்.

உமா, சாருவிடம், "இதோ பாரடி, கண்ணு! அந்தப் பொண்ணின் தாத்தாவுக்கு ரெண்டு கண்ணும் தெரியலை, பாரு! அவளையும் நாம் கூட்டி வச்சுண்டுட்டோமானால், அந்தக் கிழவன் என்னம்மா பண்ணுவான்? நடக்கக்கூட முடியாமே தவிப்பானே? - இந்தா! இந்த ரூபாயைக் கொண்டு போய் அவன் கிட்டக் கொடுத்துட்டு வா, அம்மா!" என்றுசொல்லி ஒரு முழு ரூபாய் எடுத்துக் கொடுத்தாள். சாரு அதை வாங்கிக் கொண்டு கீழே ஓடினாள்.

ஓர் அணா அல்லது இரண்டு அணா கொடுத்திருந்தால் அந்தப் பிச்சைக்காரப் பெண் வழக்கம் போல், "நீ நன்னாயிருக்கணும், மகராஜியாயிருக்கணும்" என்று ஏதாவது வாழ்த்தியிருப்பாள். ஆனால் சாரு ஒரு ரூபாயை அவளிடம் கொடுத்ததும், அவளுக்குப் பேசவே நா எழவில்லை.



"அந்தக் காலத்துல அரசர்கள்லாம் சுத்த கஞ்சத்தனமா இருந்திருப்பாங்க போல...!"

"எப்படி சொல்றீங்க?"

"அப்ப புகழ்ந்து பாடுனவங்களுக்கு வெறும் பண முடிப்புத்தான் கொடுத்திருக்காங்க; இப்ப புகழ்ந்து பேசினாலே மந்திரி பதவியே கொடுத்துர்ராங்களே...!"

– உ.ர. சங்கர்



சாருவை ஒரு மாதிரி பார்த்துக் கொண்டே, கிழவனிடம் அதைக் கொடுத்து, "ஒரு ரூவா, தாத்தா!" என்றாள். அந்தக் கிழவனின் குருட்டுக் கண்களில் கூட அந்தச் சமயம் ஒளி வந்தது போல் தோன்றிற்று. அவன் ரூபாயைக் கையால் தடவிப் பார்த்தபடி ஒரு கணம் நின்றான். பிறகு, கீழே உட்கார்ந்து, ரூபாயைப் போட்டுப் பார்த்தான். கணீரென்று சத்தம் கேட்கவே, அவசரமாய் எழுந்திருந்து, "வா கண்ணம்மா, போகலாம்!" என்று சொல்லிவிட்டு, அவள் கையைப் பிடித்துக் கொள்வதற்குக்கூடக் காத்திராமல் போகத் தொடங்கினான்.

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த சாரு, அவன் போகத் தொடங்கியவுடனே, அந்தப் பெண்ணைப் பார்த்து "இதோ பாரு; நீ இந்த வீட்டிலே என்னோடேயே இருக்கயா? உனக்கு நல்ல பாவாடை, சொக்காய் எல்லாம் வாங்கித் தரச் சொல்றேன்" என்றாள்.

அந்தப் பெண்ணுக்கு, சாரு ஒரு ரூபாயைக் கொடுத்ததுமே அவள் தன்னை ஏதோ ஏமாற்றப் பார்க்கிறாள் என்று ஒருவித சந்தேகம் தோன்றியிருந்தது. இப்போது அந்தச் சந்தேகம் அதிகமாய்ப் போய் விட்டது.

"நான் என்னத்துக்கு உன் வூட்டிலே இருக்கேன்? என் தாத்தாவோட நான் போவாண்டாமா?" என்று சொல்லிவிட்டு அந்தப் பெண் ஓட்டமாய் ஓடிப் போய் முன்னால் போய்க் கொண்டிருந்த தாத்தாவின் கையைப் பிடித்துக் கொண்டாள்.

அவர்களிருவரும் அந்தச் சாலையின் கோடி வரையில் போய் மறையும் வரையில் சாரு அவர்களைப் பார்த்துக் கொண்டே நின்றாள்.

(தொடரும்)

# பெட்ரோல் விலை ஏறுவதேன்?

**கிட்டத்தட்ட பதினான்கு வருடங்களாக அபுதாபியில் வேலை பார்த்து வரும் பாலசுப்பிரமணியன், ஆழ் கடலிலிருந்து எண்ணெய் எடுக்கும் துறையில் அநுபவசாலி. இன்னும் 15–20 ஆண்டுகளில் இந்தியர்களுக்கான வேலை வாய்ப்பு அங்கே குறைந்து விடும் என்கிறார்....**

"எண்பதுகளில் நான் அபுதாபிக்குப் போனபோது, முதலில் பாலைவனத்தில் தான் வேலை பார்த்தேன். மணல், மேடு மாதிரி அல்ல, மலை மாதிரி குவிந்திருக்கும்!... பிறகுதான் 'ஆஃப் ஷோர் டிரில்லிங்' எனப்படும் ஆழ் கடலிலிருந்து எண்ணெய் எடுக்கும் துறைக்கு மாறினேன். அபுதாபி கடற்கரையிலிருந்து 160 கி.மீ. தள்ளி, கடலில்! அபுதாபி, எண்ணெய் வளம் கொழிக்கும் நாடுகளில் ஏழாவது இடத்தில் இருக்கிறது!" என்கிறார் பாலசுப்பிரமணியன்.

43 நாள் வேலை பார்த்தால், 20 நாள் லீவும் டிக்கெட்டும் கிடைக்கும்.

"அதாவது, வருடத்துக்கு ஆறு தடவையா?"

"ஆமாம். ஆனால் வேலை கடுமையாக இருக்கும். தினசரி 12 மணி நேர வேலை. அதுவும் நடுக்கடலில், பிளாட்ஃபாரம் என்ற மேடையில்தான். எங்களை தினசரி ஹெலிகாப்டர்களில்தான் கொண்டு போய் விடுவார்கள். 19 பேர் உட்காரக்கூடிய விமானம்."



✱ பாலசுப்பிரமணியன் : "சிறிய ஃப்ளாட்டுகளை இடித்து விட்டு அங்கே பெரிய பல அடுக்கு மாடிகள் கட்டுகிறார்கள்!"

ஜுன், ஜுலை, ஆகஸ்ட், செப்டம்பர் மாதங்களில் சூடு அதிகமாகவே இருக்குமாம். அதிலும் வீணாகிப் போகும் காஸ் எரிக்கப்படுவதால் உண்டாகும் உஷ்ணம் வேறு சேர்ந்து கொள்ளும்! எண்ணெயில் தான் ஏராளமாகப் பணம் வருகிறதே, இது எதற்கு என்று காஸை வீணாக்கிக் கொண்டிருந்தார்கள். இப்போதுதான் NGL எனப்படும் நேச்சுரல் காஸ் லிக்விபிகேஷன் முறைப்படி அதை உருமாற்றி, பாலீதீன் பொருட்களைத் தயாரிக்க உதவும் புரோபேன், ப்யூடேன் போன்ற மூலப் பொருட்களை உருவாக்கி, ஜப்பானுக்கும் கொரியாவுக்கும் ஏற்றுமதி செய்யத் தொடங்கியிருக்கிறார்கள்.

"எங்களைச் சுற்றிலும் நிறைய பிளாட்ஃபாரங்கள் தென்னை மரங்கள் மாதிரி சூழ்ந்திருக்கும். 1800 மீட்டரிலிருந்து 2200 மீட்டர் வரை ஒரு லேயர் எண்ணெய் இருக்கும். இன்னும் சற்றுக் கீழே போனால் 3700 முதல் 4500 மீட்டரில் இன்னொரு லேயர் இருக்கும்.

இந்தியாவிலும் இதே மாதிரிதான் இருக்கும். ஆழம் வேண்டுமானால் சற்று மாறுபடலாம். ஆனால் நம்மிடம் இருப்பு குறைவு. ஒரு நாளைக்கு எங்கள் ஒரு எண்ணெய் வயலில் மட்டும் சுமார் மூன்றரை முதல் நாலு லட்சம் பீப்பாய் அளவுக்குக் கிடைக்கும். நம் நாட்டில் பாம்பே-ஹையில் மட்டுமே அதிகம் கிடைக்கக் கூடும்.''



● ஆழ் கடலிலிருந்து எண்ணெய் எடுக்க மேடை அமைத்து....

**க்**ரூடில் Sour Crude, Sweet Crude என்று இரண்டு வகை உண்டு. முன்னதில் கந்தகம் (சல்ஃபர்) அதிகம் இருக்கும். கனத்து இருக்கும். தார் பொருட்களைத் தயாரிக்கத்தான் உதவும். ஸ்வீட் க்ரூடு லைட்டாக இருக்கும். இரானிலும், இராக்கிலும் முன்னதுதான் அதிகம் கிடைக்கும். ''எங்களைப் பொறுத்தவரை ஸ்வீட் க்ரூட்தான்!'' என்கிறார் பாலசுப்பிரமணியன்.

க்ரூடின் தன்மையைப் பொறுத்து, ஒரு பீப்பாய் 15 அல்லது 16 டாலர் விலையாகிறது.

''அங்கே விலை குறையும் போது, இங்கே ஏன் பெட்ரோல் விலை குறைவதில்லை?''

''நம்முடைய பணவீக்கம் தவிர, டாலருக்கு நாம் தர வேண்டிய ரூபாயின் அளவு நாளுக்கு நாள் அதிகரிப்பதுதான் காரணம். இப்போது ஒரு டாலருக்கு 32 ரூபாய். இதில் மாற்றம் ஏதும் இல்லாத போது, இங்கே எப்படி விலை குறைய முடியும்?

''இன்னும் 120 ஆண்டுகளுக்கு அபுதாபியில் எண்ணெய் வளம் இருக்கும்'' என்கிறார் பாலசுப்பிரமணியன். ''இன்னும் 15-20 வருடங்களுக்குத்தான் அங்கே இந்தியர்கள் வேலை பார்க்க முடியும். அந்த நாட்டு மக்கள் இந்தப் பணிகளில் பயிற்சி பெறத் தொடங்கி விட்டார்கள்.''

பிரான்ஸ், பிரிட்டன், சூடான், சோமாலியா என்று நாற்பது தேசத்தவர்கள் பணி புரிகிறார்களாம் இங்கே.

பள்ளிக்கூடங்கள் நிறைய இருக்கின்றன. கல்லூரியும், பல்கலைக் கழகமும் இருக்கின்றன. அதில் இந்தியப் பேராசிரியர்கள் பணியாற்றுகிறார்கள்.

''நம் ஊரில் பழைய, பெரிய வீடுகளை இடித்து அடுக்குமாடி ஃப்ளாட்டுகள் கட்டுகிறார்கள் இல்லையா? அபுதாபியில் சிறிய அடுக்கு மாடிக் கட்டடங்களை இடித்து பல அடுக்கு மாடிக் கட்டடங்களைக் கட்டி வருகிறார்கள். பசுமைப் புரட்சிக்கு நிறையவே செலவழிக்கிறார்கள். கண்ணுக்குக் குளிர்ச்சியாக வகை வகையான செடி கொடிகளை நகரில் எங்கும் பார்க்கலாம்.

''பெண்களுக்கு டிரைவிங் லைசன்ஸ் கொடுக்கிறார்கள். ஏர் ஹோஸ்டஸாகக் கூட இருக்கிறார்கள் பெண்கள். சௌதி அராபியா, இரான் போல அல்லாமல், அதிக சுதந்திரம் தந்து நடத்துகிறார்கள். பாதுகாப்பான வாழ்க்கை. திருட்டு, கொலை எதுவும் கிடையாது.''

– சித்தார்த்



''எனக்குத் தூக்கத்துல நடக்கற வியாதி இருக்கறதுனால ஒரு நன்மையும் இருக்குடி...!''

''என்ன நன்மை....?!''

''திருடனுங்கள்ளாம் 'நான்' ரவுண்ட்ஸ்... வர்றதா நினைச்சுக்கிட்டு 'மாமூலை' கொடுத்துட்டுப் போயிடறாங்க.....!''

– ஆர். உமா.

இதயத்துக்கு இதமானதொரு சந்தோஷச் செய்தி!

இதுவரை இறக்குமதி செய்யப்பட்டு வந்த இதய வால்வு, இனி இந்தியாவிலேயே கிடைக்கும். இதில் என்ன பெரிய சந்தோஷம், என்று கேட்கலாம்.

நம் நாட்டில் மட்டும் வருடத்துக்குச் சுமார் இருபத்தைந் தாயிரம் பேர் இதய வால்வு மாற்றுச் சிகிச்சைக்காகக் காத்திருக்கிறார்கள். ஆனால் வசதிக் குறைவினால் வருடத் தில் 4,000 வால்வுகள் மட்டுமே பொருத்தப்படுகின்றன. அதுவும், இறக்குமதி செய்யப்படும் வால்வின் விலையோ 20,000 ரூபாய் முதல் 40,000 ரூபாய் வரை ஆகிறது! அறுவைச் சிகிச்சைக்கு வேறு தனியே செலவு. இரண்டும் சேர்ந்தால் ஒரு சாமான்ய நோயாளியால் தாக்குப் பிடிக்க முடி யுமா?

சென்னை டி. டி. கே. பார்மா நிறுவனம், இந்த வால்வு களை இப்போது இந்தியாவிலேயே தயாரித்து விற்பனை செய்யும் உரிமை பெற்றிருக்கிறது. மருத்துவம் மற்றும் இஞ்சினீயரிங் பிரிவுகள் செயல்படும் இந்நிறுவனத் தின் பெங்களூர் தொழிற்சாலையில் இவை தயாரிக்கப் படும்.

விற்பனை உயரதிகாரி நாகேசுவர ராவைச் சந்தித்துச் சில விவரங்களைக் கேட்டோம் :

● *இதய வால்வு எப்படி இயங்குகிறது?*

இதயத்தில் நான்கு அறைகள் இருக்கின்றன. வலது இதயத்தின் மேலறைக்கும் கீழறைக்கும் இடையே ஒன்று. இந்த வால்வு கீழ்ப்பக்கம் மட்டுமே திறக்கக் கூடிய மூடு கதவு கொண்டது. இதைப் போலவே இடது இதயத்தின் மேலறைக்கும் கீழறைக்கும் இடையே ஒரு வால்வு. இந்த வால்வுகள் இருப்பதால், இரத்தம் மேலறையிலிருந்து கீழறைக்குப் பாயுமே தவிர, கீழே இருந்து மேலே செல் லாது. இந்த வால்வுகள் பழுதுபட்டால் மேலறையிலிருந்து கீழறைக்கு இரத்தம் செல்லத் தடை ஏற்படும்; அல்லது ரத்தம் மேலறைக்கே திரும்பச் செல்லும் அபாயம் நேரி டும்.

● *வால்வுகள் எப்படிப் பழுதாகின்றன?*

குழந்தைகளுக்கு ஸோர் த்ரோட் (தொண்டைக் கரகரப் புடன் கூடிய வலி) வந்து அவஸ்தைப்படுகிறது பாருங்கள். இதுதான் ஆரம்பம். இதற்குச் சிகிச்சை செய்யாமல் அசட் டையாக விட்டுவிடும்போது, மறுபடி மறுபடி அது தாக்கு கிறது. ஸ்ட்ரெப்டோகாக்கி என்கிற பாக்டீரியா கிருமிதான் இதற்குக் காரணம். இது எதில் போய் முடிகிறது என்றால், ருமாட்டிக் ஹார்ட் காய்ச்சலில். நம் நாட்டில் ஆயிரக்கணக் கான குழந்தைகளை இது பாதிக்கிறது. பெனிசிலின் ஊசி போட்டு இதைக் குணப்படுத்திவிட முடியும். ஆனால் அறி யாமை, பண வசதி மற்றும் மருத்துவ வசதிக் குறைவு காரண மாக, இந்தக் குழந்தைகள் வளர்ந்தபின் இதய வால்வு பழுது பட்டுத் துன்புறுகின்றன.

● *அப்போது என்ன அறிகுறிகள் தென்படும்?*

சாதாரண, நடைமுறை வாழ்க்கைக்குத் தேவையான வேலைகளைச் செய்ய முடியாத அளவுக்கு வால்வுகள் இயங்க மறுக்கும் போது, இரத்த ஓட்டம் தடைப் படும். உடல் சோர்வும், மனத்தளர்ச்சியும் சேர்ந்து கொண்டு, எந்த வேலை யிலும் ஈடுபட முடியாது

* டிஸ்க் வால்வும், தயாரிப்பும்....

# இந்தியாவிலேயே தயார






# ாகும் இதய வால்வுகள்!

போகும். இதயத்தைத் திறந்து, வால்வைப் பழுது பார்ப்பது அல்லது வால்வை மாற்றி விடுவதுதான் வழி.

● ***செயற்கை வால்வுகளை எப்படித் தயாரிக்கிறீர்கள்?***

இடைவிடாத ஆராய்ச்சிக்கும் பரிசோதனைகளுக்கும் பிறகே இது சாத்தியமாயிற்று. திருவனந்தபுரத்தில் உள்ள ஸ்ரீ சித்திரைத் திருநாள் மருத்துவ - விஞ்ஞான தொழில் நுட்பப் பிரிவின் தலைவர் டாக்டர் வலியத்தான் செய்த முயற்சியின் காரணமாக,

பயோ-டெக்னாலஜி துறை இங்கு இயங்குகிறது. இந்தத் துறை உள்ள ஒரே ஒரு மருத்துவமனையும் இதுதான். இரத்தத்தைச் சேகரித்து வைக்கும் பைகள், மூளை மற்றும் இதய அறுவைச் சிகிச்சைக்கான உபகரணங்கள் தயாரிப்பதில் இந்தத் துறை புகழ் பெற்றது. இது, தேசிய ஆராய்ச்சி விரிவாக்கக் குழுவின் தொழில்நுட்ப ஆலோசனையோடு செயல்படுகிறது. இவர்கள்தான் இந்தச் சரிந்து திறக்கும் - டில்ட்டிங் வகை வால்வுகளைத் தயாரிக்கிற முறையைக் கண்டுபிடித்தவர்கள். இந்த பயோடெக்னாலஜி துறையில் இஞ்சினீயர்கள், டாக்டர்கள் எல்லாரும் பணியாற்றுகிறார்கள்.

● ***இந்த வால்வு தயாரிக்க என்னென்ன பொருள்களைப் பயன்படுத்துகிறீர்கள்?***

கடினமான உலோகக் கூடு. ஹேயன்ஸ் அல்லாய் எனப்படும் உலோகம். ஒரு நாளைக்குச் சுமார் லட்சம் தடவை மூடித் திறக்கும் வால்வு திடமான பொருளாக இருக்க வேண்டும் அல்லவா? அதனால்தான். நடுவே உள்ள வட்டத்தகடு - டிஸ்க் - பாலிதீனால் உருவாக்கப்படுகிறது. வெளியே சுற்றியுள்ள, இதயத்தோடு வைத்துத் தைக்கும் வளையம், பாலியெஸ்டர் இழையினால் ஆனது.

● ***மாற்றுச் சிறுநீரகம் பொருத்தப்படும் போது, குறைந்த காலத்திலேயே அதை நிராகரித்துவிடும் மனித உடல், இந்த அந்நியக் கூட்டுப் பொருளை எப்படி ஏற்கிறது?***

இந்த வால்வு கண்டுபிடிப்பு ஒரு சாதனை. இந்தியா ஆகட்டும், அயல்நாடுகள் ஆகட்டும்; மிருகங்களிடம் முழுமையாகப் பரிசோதித்த பிறகு, மனிதர்களிடமும் இதை முறையாகப் பரிசோதித்தோம். இதயத்தோடு இணைந்து பணியாற்றும் திறன் நிரூபிக்கப்பட்ட பிறகே இதன் வெற்றி உறுதியானது. அரசின் நெறி முறைக் குழு இதற்கு ஒப்புதல் அளித்தது. பம்பாய் கே. இ. எம் மருத்துவமனை, கோவை குப்புசாமி நாயுடு நினைவு மருத்துவமனை, கல்கத்தாவிலுள்ள போஸ்ட் கிராஜுவேட் மெடிகல் எஜுகேஷன் அண்ட் ரிசர்ச் இன்ஸ்டிடியூட், பாண்டிச்சேரி ஜிப்மெர், திருவனந்தபுரம் ஸ்ரீ சித்திரைத் திருநாள் மருத்துவ விஞ்ஞான நிறுவனம் ஆகியவற்றில் இவை பொருத்தப்படுவதற்கான ஏற்பாடுகளை அங்கீகரித்தது.

● ***இதன் விலை?***

எல்லாரும் வாங்கும்படி 12,000 ரூபாய்க்குக் கிடைக்கும். இறக்குமதி செய்யப்பட்ட வால்வைவிட மிகக் குறைவான விலைதான். டி. டி. கே. பார்மாவின் பெங்களூர் தொழிற்சாலையில் இதைத் தயாரிக்க ஏற்ற தொழில் நுட்ப வசதிகள் இருப்பதால், நாங்கள் இந்தியாவில் இதைத் தயாரிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டோம்.

பேட்டி, கட்டுரை : சாருகேசி

# அரண்மனைக் காவலன்

முதலில் சில சந்தேகங்கள் :

● பம்பாயில் நான்கு போலீஸைக் கொன்றபின் எப்படி ஹீரோ கிராமம் வந்து சேர்கிறார்? போலீஸூம், அரகம் பட்டாணி, கண்டல் கொறித்துக் கொண்டிருக்குமா?



● ஸ்ரீவித்யா பூர்வ கதை சொல்லும்போது ஏற்கெனவே நான்கு கத்திக் குத்து வாங்கியிருக்கிறார். எப்படி இடைவேளை முடிந்தும் அதைத் தொடர்கிறார். உயிருக்கு யார் ஹோல்டான் சொன்னார்கள்?

அப்புறம் கதை. பகம்பொன் என்பது ஒரு கிராமம். அங்கு ஓர் அரண்மனை. உள்ளே மூன்று விதவைகள், ஒரு பெண். அவர்களை அடைத்திருப்பது ஒரு வில்லன்... பாக்கி கதையை உங்கள் வீட்டுப் பாட்டியிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்.

ரெகுலர் சரத்குமார் ஸ்டைல்தான் இதிலும். கிள்ளி விட்டதுபோல் சடக்கென்று எழுந்திருக்கிறார். வீரம் என்று நம்புவோம். நிச்சயமாக அவரைப் புகழ்ந்து பாடப்படும் பாட்டால் சிலிர்த்து எழுவதாக இருக்க முடியாது.

ரகுவரன் வில்லன். 'பரிந்தா' நானாபடேகரின் ஜூனியர். பேரைக் கெடுக்கும் ஜூனியர். பாதி முடி முகத்தை மறைக்க, மீதியை நெற்றித் திலகம் மறைத்து விடுகிறது.

காமெடிக்கு என்று தனியாக வசனம் எழுதியிருக்கிறார்கள். ஸ்டாம்புசைஸ் சிரிப்புக் கூட வரவில்லை. எரிச்சலே மிச்சம்.

தேவா டப்பாங்குத்து மேளத்தை எத்தனை படத்தில் தட்டுவார்?

டைட்டிலை நியாயப்படுத்த, அவ்வப்போது ஸ்ரீவித்யா, 'நீதான் அரண்மனையின் காவலன்' என்கிறார்.

ஒரே திருப்தி. வழிசல் டான்ஸ் இல்லை. ஆனால் அதற்கும் சேர்த்து வைத்து பி. வாக ஸ்டைலில் ஊர்ப் பெண்கள் எல்லாம் தாலி கழற்றுகிறார்களாம். எங்கே போய் முட்டிக் கொள்ள?

மாதம் ஒரு படம் வெளிவருவதுபோல் கணக்கிட்டு, சரத்குமார் வேலை செய்கிறார் போலும். தயாரிப்பாளர்கள் புறமுதுகிட்டு ஓடும் அளவுக்குப் 'பணால்' ஆகாமல் இருந்தால் சரி!

- துளசி



"தலைவர், 'நன்றாக எண்ணிப் பாருங்கள்'னு சொன்னப்ப கூட்டத்துல என்ன ஒரே சலசலப்பா இருந்திச்சு?"

"கூலிப் பணம் சரியா இருக்கான்னு எல்லாரும் எண்ணிப் பார்த்திருப்பாங்க!"

- சீர்காழி வி. ரேவதி

# வண்ணத்துப்பூச்சி வேட்டை

## 11

தொங்கும் விளக்கால்
ஆடும் நிழல்கள்
மங்கும் ஒலிகள்
மாலை இருளில்
- ஆத்மாநாம்

சீதா இப்போது வேறு மாதிரி இருந்தாள். கரிதார் செட், வெள்ளி நகைகள் போட்டுக் கொண்டு எத்னிக் சிக் என்று சொல்வார்களே, அந்த மாதிரி டிரஸ். பெரிசாக கூலிங்கிளாஸ் அணிந்து கொண்டு மாருதியில் வந்து இறங்கினாள்.

கையில் மலர்க் கொத்து கொண்டு வந்திருந்ததை ஜாடி தேடிக் கிடைக்காமல் ஒரு கிளாஸ் தம்ளரில் செருகி வைத்தாள்.

"இந்த வீட்டுக்கு இன்னும் நிறைய வாங்கணும்!" என்றாள்.

நான் வெட்டி வைத்திருந்த காரட்டை சுவாதீனமாக எடுத்துக் கடித்தாள். நான் முன்ஸீட்டில் உட்கார்ந்து கொள்ள, ஒருகையால் அலட்சியமாக ஓட்டிக் கொண்டு போனாள். அவ்வப்போது சிலரைப் பார்த்துக் கையசைத்தாள்.

பக்கத்திலேயே எக்ஸ்க்ளூஸிவ் ஷோரூம் வைத்திருந்த ஒரு கடைக்குப் போனோம். "இந்த ஒவ்வொரு ட்ரெஸ்ஸும் ஒரு மாடலாத்தான் இருக்கும். ஒருத்தர் ட்ரெஸ் மற்றொருத்தர் போட முடியாது. ஒவ்வொன்றும் வேற வேற."

மெஸ்ஸனைன் வைத்து பேஸ்மெண்டில் ஏஸி செய்யப்பட்டு இருந்தது அந்த இடம். உள்ளே நுழைந்ததும் "ஹாய் அஞ்சு, ஹாய் சீதா" என்று அவர்கள் கன்னத்தில் முத்தமிட்டுக் கொள்ள, "திஸ் இஸ் அர்ஜுன்ஸ் ந்யு வைஃப் . கிவ் ஹர் எ ஸ்மார்ட் ட்ரெஸ்" என்றாள்.

நான் வேடிக்கை பார்த்தேன். வண்ண வண்ண கரிதார் செட்டுகள் எனாமல் விரல்களில் மாட்டியிருந்தன. சீதா சொன்னது போல் ஒவ்வொன்றும் தனி டிசைன்.

அந்த அஞ்சு என்கிறவளுக்குக் சீதாவின் வயசுதான் இருக்கும். கண்ணாடி சற்று வயசு தூக்கலாகக் காட்ட, ஒரே நுனி நாக்கு இங்கிலீஷில் என்னை இப்படி அப்படி ஒரு மாடல் போல பார்த்து, "காட்டன் க்ளாஸிக் ரிச் புல்காரி ஒர்க் டு டோன் குர்த்தா போட்டா இவங்களுக்கு டப்பா இருக்கும். அதோட கழுத்துல சிம்பிளா எத்னிக் டிஸைன்ல ஒரே ஒரு மாலை போதும். நீங்க மாடல் பண்ண விரும்பறீங்களா?" என்றாள்.

"நானா?" என்றேன்.

"கமான், ஒய் நாட்?" என்றாள் சீதா.

எனக்கு எதும் புரியவில்லை. சீதா செலக்ட் பண்ண டரெஸ்ஸின் விலை மட்டும் புரிந்தது. "ஆயிரத்து இருநூறா?"

"டோண்ட் ஒர்ரி" என்றாள் சீதா.

அவள் க்ரெடிட் கார்டில் பில் கொடுத்தாள். "சீதா நான் இதைச் சம்மதிக்கவே முடியாது, அர்ஜுன் கோபித்துக் கொள்வார்!" என்றேன்.

"நான் அர்ஜுன் கிட்ட சொல்லிக்கறேன். அவருக்குக் கோவிக்க எல்லாம் டயம் இல்லை. பணம் பண்ணிட்டிருக்காங்க ரெண்டு பேரும்."

ட்ரையல் ரூமில் என் முன்னேயே என் ஸாரியை உருவிப் போட்டு விட்டபோது, வெட்கமாக இருந்தது.

"நமக்குள்ள என்ன வெக்கப்பட நீங்க?" என்றாள்.

அந்த ட்ரெஸ் எனக்கு நன்றாகத்தான் இருந்தது. அவர்கள் சொல்வது போல் விசேஷம் இருக்கத்தான் இருந்தது.

ஃபெமினா இதழில் வரும் பொம்மை போல இருந்தேன். எனக்கு நெற்றியில் இருந்த ஸ்டிக்கர் பொட்டை சீதா எடுத்து விட்டு, "இப்ப பாருங்க" என்றாள். எனக்குத் திகைப்பாக இருந்தது.

"யு லுக் ராவிஷிங். அர்ஜுன் இஸ் லக்கி" என்றாள்.

எனக்கு சீதாவைப் பிடித்துப் போகா விட்டாலும் அவள் மேல் வெறுப்புக் குறைந்து போனது உண்மை.

அங்கிருந்து டரைவ் இன் ஓட்டலுக்கு போய், லைட்டாக டிபன் சாப்பிட்ட போது சீதா, "அர்ஜுன் என்ன சொன்னார்?"



என்றாள்.

''ஆபீஸ்ல சிவேகிதம்னு சொன்னார்.''

''என்னை வேலையை விட்டு நீக்கறதா நிஜமாவே சொன்னாரா?''

''அப்படித்தான் சொன்னதா ஞாபகம்.''

''எனக்கென்னவோ வியப்பா இருக்கிறது. ரெண்டு பேரும் ப்ரமோஷன் கொடுக்கறதைப் பத்திப் பேசினாங்க.''

''அதைத்தான் அர்ஜுன் அப்படிச் சொன்னரோ என்னவோ?''

''அதெப்படி அந்த கன்ஃப்யுஷன் வரும்! இவங்க என்னை அனுப்பறதா இருந்தாலும் பரவாயில்லை. எனக்கு எத்தனையோ வேலை காத்திருக்கு.''

''நான் சொன்னேன்னு நீங்க அவரைக் கேட்டுராதிங்க. என்மேல நேத்திக்கு ராத்திரியே பாஞ்சார்.''

சுஜாதா

தோவை சிலர் அடையாளம் கண்டு கொண்டார்கள்.

எல்லாரிடமும் சிரித்துக் கொண்டு, பல விஷயங்கள் பேசினாள்.

''ஒரு நாள் நம்ம ஃப்ரைடே க்ளப்புக்கு வரணும் நீங்க'' என்றாள்.

''என்னை நீங்கன்னு கூப்பிடாதீங்க. நான் உங்களைவிடச் சின்னவள்னு நினைக்கிறேன்.''

''அன் ஒன் கண்டிஷன், என்னையும் தோன்னு கூப்பிடணும். நீங்க வாங்க பிஸினஸ் கூடாது.''

''சரி.''

''சரி'' என்று என் கையைத் தட்டினாள். நான் உங்களுக்கு அர்ஜுன் பத்தி சொல்லியே ஆகணும் ரேகா. பார்ன் ஜீனியஸ் அவர். ஃபினான்ஸ்ல அவருக்கு இருக்கற இயல்பான அறிவு, அமெரிக்கால இருந்தா



''வரவர எதுக்குத்தான் டீ.வி விளம்பரம்ன்னு ஒரு வகை தொகை இல்லாம போச்சு...?''

''ஏண்டா?''

''அரசியல் கூட்டத்திற்கு ஆள் சேர்க்க வேண்டுமென்றால் எங்களை அணுகவும்னு விளம்பரம் பண்றாங்க!''

- இராஜாக்கமங்கலம் மணி

இந்நேரம் பல மிலியன் டாலர் பண்ணிருப்பார். நிச்சயம் அமெரிக்கா போய்டுவார். இந்த கம்பெனியே அவருடைய ஐடியா தான். இரண்டு வருஷத்தில பிரமிக்கத் தக்க மாறுதல் எல்லாம் பண்ணிட்டார். இப்ப ஒரு பெனிஃபிட் ஃபண்டு ஐடியா வச்சிருக்கார். அப்படியே டெபாஸிட் வந்து குவியப் போறது. எல்லாம் வித் இன் தி லா. என்ன, அவர்கிட்ட என்னன்னா காசு பண்ண எந்த சந்தர்ப்பம் வந்தாலும் விடமாட்டார். அவர் கிட்ட பெட் வெச்சு இதுவரைக்கும் எத்தனை தோத்திருக்கேன் தெரியுமா? எங்கிட்ட காசு வாங்க மாட்டார். அதுக்குப் பதிலா பார்ட்டிதான். தாசாவில தோசை, அவருக்கு பீச்ல பேல்பூரி சாப்டணும். சின்னச் சின்ன ஆசைதான்!''

''சீட்டு நிறைய ஆடுவாரோ?''

''அதான் சொன்னேனே, சீட்டு என்ன எதில காசு பண்ண சான்ஸ் இருக்கோ அதெல்லாம் ஆடுவார். அன்னிக்கு அப்படித்தான் அவர்கூட மைலாப்பூர் கோவிலுக்குப் போயிருந்தோம். ஜப்பானின் ஃபினான்ஸியர் ஒருத்தன் ராதா சில்க் போகணும்னு சொன்னான். வழில ஒரு ஓரத்தில நிரை போட்டு காசு வெச்சு கத்தி கத்தி ரவ்லட் மாதிரி ஆடிக்கிட்டு இருந்தாங்க. சட்டுனு அதைப் பார்த்ததும், 'தோ சப்பை மூஞ்சிக் காரனை நீ பாத்துக்க. நான் இங்க போய் இது என்னன்னு பார்த்துட்டு வந்துர்றேன்'னு சாக்குத் திரையை நீக்கிட்டு உள்ள போய்ட்டார். கம்பல்ஸிவ் காம்ப்ளர். ஆனா இதுனால் எந்த வித தொந்தரவும் கிடையாது.''

''சிகரெட் குடிப்பாரா?''

''எப்பவாவது, டென்ஷனா இருக்கறப்ப. அது எதும் ஹாபிட் இல்லை. வினாதான் பைப் இல்லைன்னா கைக்குழந்தை பிடுங்கப்பட்ட தாய் போல ஆய்டுவார்.''

''குடிப்பாங்களா?''

''ம், அதும் பார்ட்டிலதான். ஸ்காட்ச். ஏன் நான் கூட எப்பவாவது ஜின் சாப்டுவேனே. என்ன கொஞ்சம் சிரிக்க ஆரம்பிச்சேன்னா நிறுத்த முடியாது. அதுனால குடிக்கிறதில்லை. இதையெல்லாம் பெரிசா எடுத்துக்கிட்டுப் புருசன் கூட சண்டை போடாதே. இதெல்லாம் சின்ன விஷயம்.''

''பின்ன எதுதான் பெரிய விஷயம்?''

''பாரு, எனக்குக் கல்யாணம் ஆகலை. கல்யாணம் பண்ணிக்கிறதா உத்தேசம் இல்ல. நான் பி.எஸ் பண்ண அமெரிக்கா போறேன். என் ப்ளான் வேற ரூட்ல இருக்கு. உலகத்தில் எதையுமே சீரியஸா எடுத்துக்காதீங்க. யுல் பி ஹாப்பி. என்ன சொல்றே?''

''எனக்குச் சிலதெல்லாம் சீரியஸா எடுத்துக்கணும் போல இருக்கு.''

''உதாரணமா?''

''பொய் சொல்லாம இருக்கறது எனக்கு என்னவோ முக்கியமாப் படுது.''

''யு ஹாவ் எ பாயிண்ட் தேர். அர்ஜுன் பொய் சொல்வாரா?''

''முழுசா பொய்னு சொல்லலை. ஆனா உண்மையைச் சரியாச் சொல்ல மாட்டேங்கறார். தவணை முறையிலதான் சொல்றார்.''

அதைக் கேட்டு மிக அழகாகச் சிரித்தாள். ''தட் வாஸ் ரியலி நைஸ் எக்ஸ்பிரஷன். தவணை முறை! ஓ மை காட்!'' என்று மறுபடி சிரித்து, ''ஐ மஸ்ட் டெல் அர்ஜுன்.''

''சொல்லிடாதிங்க ப்ளீஸ்.''

''அர்ஜுன் இஸ் ஸச் எ நைஸ் மேன்.''

''முப்பத்தைந்து வருஷத்தில முப்பத்தைந்து லட்சம் பண்ணணும்ங்கறார்.''

''பண்ணிடுவாங்க, ரெண்டு பேரும் பண்ணிடுவாங்க.''

நிருபர் : ஜோடிப் பொருத்தம் போட்டியில் உங்களுக்கும் உங்கள் கணவருக்கும் பரிசு கிடைக்கக் காரணம் என்னன்னு நினைக்கிறீங்க?

குடும்பத்தலைவி : 'உங்களுடைய கணவருக்கு நீங்க எப்படி ஒத்தாசையா இருப்பீங்க'ன்னு கேட்டபோது, 'அவரு மாவாட்டறப்ப அவரு கூட உட்கார்ந்து மாவைக் கையால தள்ளிவிடுவேன்'னு பதில் சொன்னதுமே பரிசு எங்களுக்குக் கண்டிப்பா கிடைக்கும்னு தெரிஞ்சு போச்சு!

– ஏ. கருணாநிதி



''அதுக்கப்புறம்?''

''அதுக்கப்புறம் எழுபது லட்சம்'' என்றாள் கண் சிமிட்டிக் கொண்டு.

''நான் உன்னை ஒன்னு கேட்டா கோவிச்சக்கமாட்டியே கீதா....''

''கேளு ரேகா. என்னை கோவப் படுத்தறது ரொம்பக் கஷ்டம்.''

''நீ அர்ஜுனைக் கல்யாணம் பண்ணிக் கிறதா ஒரு நெனைப்பு இருந்ததா?''

''யாருக்கு?''

''உனக்குத்தான்.''

''அப்படின்னு அர்ஜுன் சொன் னாரா?''

''ஆமாம். எதையோ எதிர்பார்த்து ஆபீஸ்ல ஒரு ஸீன் க்ரியேட் பண்ணதாகவும் அதனாலதான் உன்னை ஆபிஸ்லருந்து நீக்கிட்டதாகவும்.''

''மை காட்! ஓ மைகாட்!'' என்று தலையை அடிக்கடி ஆட்டி, எப்படியெல் லாம் ஜனங்கள் கற்பனை பண்ணிக்க முடியும்னு வியப்பா இருக்கு. ரேகா நான் சொன்னேன் பாரு, அதுதான் சத்தியம். எனக்குக் கல்யாண எண்ணமே கிடையாது. நான் போறேன் அமெரிக்கா. அட்மிஷன் எல்லாம் கெடைச்சாச்சு. ஸ்காலர்ஷிப் இல்லாததால குருவி மாதிரி பைசா சேத்துக் கிட்டு இருக்கேன். யூ மீன் அர்ஜுன் ஸெட் தட்? எனக்கு ரொம்ப ஆச்சரியமா இருக்கு.''

''இதையும் அவர்கிட்ட கேட்டுரா திங்க. எனக்கு இப்ப உன்னைச் சந்திச்சதும் சந்தேகம் தீர்ந்து போச்சு. உங்களுக்குள்ள எதும் இல்லை, இருக்க முடியாதுன்னு உங்க சுபாவம் புரிஞ்சுடுத்து. அதனால் நான் தப்பா எண்ணிக்கப் போறதில்லை. ஆனா மனசை உறுத்திண்டே இருந்தது. இந்தக் கேள்வி. கேட்டுட்டேன். என்ன, எதுக் கெடுத்தாலும் கோபித்து ஷூவை உதர்ற தும் காரை வேகமா ஓட்டறதும் எதாவது விதத்தில கோபத்தைக் காட்டறார்.''

''இந்த டிடெய்ல் எல்லாம் ஒரு மனைவிக்குத்தான் தெரியும். ஆபீஸ்ல அவருக்கு கோபமே வராது! கோபம் வராத பாத்துக்கறதும் நம் பொறுப்பு'' என்றாள்.

போகிற போக்கில் என் கையைப் பற்றி அழுத்தி, ''ஒர்ரி பண்ணிக்காதே. நீ சந்தோஷமாவே இருப்பே. அர்ஜுன் இஸ் எ ஜெம். அவரைக் கட்டிக்க நீ கொடுத்து வெச்சிருக் கணும். சும்மா அது என்ன, இது என்னன்னு கேட்டுட்டே இருக்காதே'' என்றாள்.

''எட்டுக் கல்யாணம் ஆன மாதிரி அட் வைஸ் பண்ற?'' என்றேன்.

''கல்யாணம் பண்ணிக்காம கல்யாணத் தைப் பத்தி நிறைய புஸ்தகம் படிச்சுட் டேன்.''

''புஸ்தகத்திலிருந்து வேற மாதிரி இருக்கு!'' என்றேன்.

**வா**ரம் முழுவதும் அர்ஜுன் ஆபிசி லிருந்து ராத்திரி லேட்டாக எட்டு எட்டரை என்றுதான் வந்தார். வந்தவுடன் அன்றைய எகனாமிக் டைம்ஸ் பார்த்துவிட்டு, நியூஸில் பிஸினஸ் பகுதி மட்டும் கேட்டு விட்டு, என்னை வைத்துக் கொண்டு க்ராஸ் வோர்டு போடச் சொல்வார். நான் ஒன்றி ரண்டு நிரப்பியதை முழுவதும் சரசர வென்று பாம்பு போல் நிரப்புவார். எப்பவா வது ஒரு ரம்மி டீல் பண்ணச் சொல்வார்.

ஞாயிற்றுக்கிழமை கூட தவறாமல் ஆபீஸ் போனார். எனக்கு வார தினங்களுக் கும் ஞாயிற்றுக்கிழமைக்கும் வித்தியாசம் போய்விட்டது.

கீதா மற்றொரு முறை, போனில், ''ஹாண்டிக்ராப்ட்ஸ் எக்ஸிபிஷன் வருகி றாயா?'' என்றாள். ''உடம்பு சரியில்லை!'' என்று சொல்லிவிட்டேன்.

கீதா எப்படியும் வாரம் மூன்று முறை யாவது போன் செய்து விசாரிப்பாள். ஒவ்வொரு முறையும் வேறு வேறு கேள்வி கேட்பாள். ''அமெரிக்கா என்ன ஆச்சு?'' என்று கேட்டதற்கு, ''இந்த வருஷம் இல்லை!'' என்று சொல்லி விட்டாள்.

நாங்கள் சென்னை போய்ச் சேர்ந்த மூன்றாவது மாதம்தான் அர்ஜுனுடைய பெற்றோர்கள் கோயமுத்தூரிலிருந்து எங் களுடன் தங்க வந்தார்கள்.

(தொடரும்)

# சிக்கரியும்

சிக்கரி என்பது ஒரு உலர்ந்த வேர். காஃபிக்குப் பதிலான ஒரு எளிய மாற்றாக உலகப்போரின் சமயத்தில் புழக்கத்தில் வந்தது. விரைவில் ஒரு பழக்கமாகி விட்டது. சிக்கரி காஃபிக்கு இணையல்ல.

தோற்றத்தில், மணத்தில், சுவையில் எதிலுமே காஃபிக்கு எள்ளளவும் இணையல்ல. காஃபி அருந்தியபின் உங்கள் நாவில் சிக்கரியின் சுவை பின்தங்கினால், அது ஒரு சாதாரண காஃபி

# காஃபியும்

என்று நீங்கள் அறிந்து கொள்ளுவீர். அப்படியானால் காஃபியுடன் சிக்கரியை சேர்க்கக் காரணம்? அசல் காஃபியின் அருமையான சுவையை கை விடுவானேன்?

அதன் மலிவான விலையினாலா? அல்லது கலப்படமற்ற காஃபியின் அருமையான சுவையை ருசிக்க உங்களுக்கு இது நாள்வரை வாய்ப்பு இல்லாததாலா?

# ஒன்றல்ல.

தரமான காஃபி கொட்டைகள் உள்ளூர்ஏலம்
மூலமாகவும் கிடைக்கும்.

# அறிமுகம்

ஆசியாவின் மிகப்பெரியதும், மிகச் சிறந்ததுமான, டாடாவின் குடகு மலைச்சாரல் தோட்டத்திலிருந்து வழங்கும் "கூர்க்". தேர்ந்தெடுத்த காஃபி கொட்டைகளை வறுத்துப் பொடித்து, புத்துணர்ச்சி நறுமணம் குறையாத வண்ணம் உடனடியாக பாக் செய்து அளிக்கப்படுகிறது "கூர்க்". நூற்றுக்கு நூறு கலப்படமற்ற ஃபில்டர் காஃபி. சுவையில் ஒப்பற்றது.

# கலப்படமற்ற

நிறமோ ஆதவனின் உதய நேரச் செம்பொன். சூடாய்ச் சுவைக்கச் சுவைக்கக் கிறங்க வைக்கும் அசல் காஃபிச் சுவை. இந்த அரிய அனுபவத்தை விவரிக்க ஒரே சொல் பொருந்தும்–ஆத்ம திருப்தி.

ஆம். நம் முன்னோர்கள் அசல் காஃபியை அருந்திப் பெற்ற ஆத்ம திருப்தி. இப்போது உங்களுக்கு மீண்டும் அளிக்க வந்துள்ளது டாடாவின் கூர்க் காஃபி.

# காஃபி




டாடாவின் "கூர்க்" காஃபி–அன்றாடம் காலையில் ஆத்ம திருப்தி.

Mudra:CCL:622:93:TAM

சுட்டெரிக்கும் பன்னிரண்டு மணி வெயிலைப் பொருட்படுத்தாமல் ஜனங்கள் குழுமியிருந்தார்கள். ஏதாவது விபத்து நிகழ்ந்திருக்குமோ... பதற்றத்துடன் அங்கு விரைந்து, கும்பலிடையே தலைநீட்டிப் பார்த்தேன். அந்தப் பாழடைந்த வீட்டின் பெரிய திண்ணையில், நடுத்தர வயதுக்காரர் ஒருவர் படுத்த நிலையில் முனகிக் கொண்டிருந்தார். அருகிலிருந்தவர் அவர் சட்டையை மேலுக்கு ஏற்றி வயிற்றில் ஏதோ எண்ணெய் தடவிக் கொண்டிருந்தார். இன்னொருவர் கால்களை சிரத்தையாய்ப் பிடித்து விட்டுக் கொண்டிருந்தார். இத்தனை பணிவிடைக்காளான அந்த மனிதரை இதற்கு முன் எங்கோ பார்த்திருப்பது போன்ற நினைவு குறுகுறுக்க... யோசனை செய்தபோது... ஆ... ஞாபகம் வந்துவிட்டது!

பைத்தியக்காரன் இவன். அழுக்குத் துணிகளும் பிரிபிரியாய்த் தொங்கும் சடைபிடித்த முடியுமாய் ஊரெங்கும் திரிந்து கொண்டிருக்கும் அந்தப் பைத்தியம்தான் இது. எத்தனை வருஷமாய்ப் பார்த்துக் கொண்டிருக்கிறேன் இவனை! தனக்குத் தானே பேசிக் கொள்வது, உரக்கச் சிரிப்பது ஆகிய பைத்தியக்கார லட்சணங்களுடன் வீதியில் சுற்றுவான். பாவம்... நன்றாக இருப்பவர்களையே பைத்தியமாக்கி வேடிக்கை பார்க்கும் ஜனங்கள், நிஜப் பைத்தியத்தை விட்டு வைப்பார்களா? இஷ்டத்துக்கு இம்சிப்பார்கள். அப்பேர்ப்பட்டவர்கள் இப்போது விழுந்து விழுந்து சிசுருஷை செய்வது மிகவும் ஆச்சரியம் தந்தது.

''என்ன நடந்தது?'' அருகிலிருந்தவரிடம் கேட்டேன்.

''சாமி வயித்துவலியில் துடிச்சுக்கிட்டு இருக்காரு...'' பதில் சொன்ன குரலில் கவலை நிரம்பியிருந்தது.

''சாமியா... இவன் பைத்தியமாச்சே...?''

''அபசாரம்... அபசாரம்...'' அவர் கன்னத்தில் போட்டுக் கொண்டார். ''நம் அஞ்ஞானக் கண்களுக்குப் பைத்திய மாட்டம் தெரியறாரே தவிர, மகா ஞானி இவர்...''

அந்த ஆள் கன்னத்தில் அறைந்து கொண்ட வேகமும், சொற்களில் தொனித்த பயமும் கலவரமளிப்பதாக இருந்தது. நல்ல காலம்... நம் கன்னத்தில் அறையவில்லை என நினைக்க வைத்தது.

''இவர் பைத்தியம் என நினைக்கறவங்கதான் நிஜமான பைத்தியக்காரங்க. இந்த உலகம் எப்போதும் பெரிய பெரிய ஞானிகளையெல்லாம் பைத்தியம்னு தீர்மானிக்கறது வழக்கம்தானே...'' என்றார் பக்கத்திலிருந்த இன்னொரு வயதான நபர்.

அப்போது கும்பலை விலக்கிக் கொண்டு அங்கு வந்தான் தல்பசாமி. கையில் டிபன் காரியரும் கூஜாவும் இருந்தன.

பைத்தியத்தின் அருகே சென்ற தல்பசாமி எனக்கு ஆச்சரியமாய்த் தெரிந்தான்.

பைத்தியக்காரனை மெள்ள எழுப்பி, சுவரில் சாய்ந்து உட்கார வைத்து, கூஜாவில் இருந்த நீரினால் அவன் கைகளைக் கழுவிவிட்ட தல்பசாமி கேரியரைத் திறந்து சோற்றைப் பிசைந்து அவனுக்கு ஊட்ட ஆரம்பித்தான்.

வியப்பு அதிகரித்துக் கொண்டே போக, பக்கத்திலிருந்தவர்களைத் தள்ளிக் கொண்டு இன்னும் அருகே சென்றேன். தல்பசாமி என்னைப் பார்த்ததை நான் கவனித்து விட்டேன். ஆனால் பார்க்காதவன் போல் முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

தல்பசாமிக்கு கடவுள் பக்தி, பூஜை, சாமியார்கள் என்றால் அடியோடு நம்பிக்கை இல்லை. அப்படிப்பட்டவன் 'சுவாமிஜி' எனப் போற்றப்படும் இவனுக்குச் சோறு ஊட்டி, வாய் துடைத்து, ஆடை இருத்திச் சேவை செய்வது என்னை ஏகத்துக்குக் குழப்பிற்று. இன்னும் கொஞ்ச நேரம் நின்று கவனித்துவிட்டுக் குழப்பத்துடனே அங்கிருந்து நகர்ந்தேன்.





**மா**தங்கள் சில நகர்ந்தன. பைத்தியக்கார சுவாமிஜியின் மகிமை பரவலாய்ப் பெருகி விட்டது. அருகே இருந்த பாழடைந்த கங்கம்மா கோவில் சுத்தப்படுத்தப் பட்டு அவர் இருப்பிட மாக்கினார்கள். அங்கே எந்த நேரத்திலும் ராத்திரி பகல் இல்லாமல் கூட்டம் இருக்கும்.

அந்தப் பைத்தியத்தின் அருகே தல்பசாயி அடிக்கடி காணப்பட்டான். அவன் இல்லாத சமயங்களில் அவன் மனைவியாவது, பிள்ளைகளாவது இருப்பார்கள். அந்தக் குடும்பம் மொத்தமும் இப்படிப் பைத்தியக்கார சுவாமிஜியின் பக்தியில் மூழ்கிப் போனது விசித்திரமாக இருந்தது.

நேரம் கிடைத்த போதெல்லாம் கங்கம்மா கோவிலுக்குச் சென்று, அந்தப் பைத்தியக்கார சுவாமிஜியை உன்னிப்பாய் கவனிக்கலானேன். நான் கவனித்தவரை எனக்குத் தெரிந்து அவர் எந்த அதிசயமும் செய்து காட்டவில்லை. என் கண் முன்னால் எந்தச் சித்து வேலையும் நடைபெற வில்லை. நான் பார்த்ததெல்லாம் இது தான்... பக்தர்கள் தம்மால் இயன்ற காணிக்கையை அவர் பாதங்களில் சமர்ப்பித்து, தம் கவலைகள்... பிரச்னைகள்... மனக்குறைகளை வெளியிடுவார்கள். அவைகள் தீருவதற்கான வழியோ, யோசனையோ... குறைந்தபட்சம் தைரியம் கூடச் சொல்ல மாட்டார் பைத்தியக்கார சுவாமிஜி. பக்தர்கள் கூடி முறையிட்டுக் கொள்ளும்போது, தனக்குத்தானே ஏதோ முணுமுணுத்துக் கொள்வார். தலையை மேலும் கீழுமாய் அல்லது பக்கவாட்டில் ஆட்டுவார். அதற்கு அர்த்தம் 'ஆம்' என்றா, 'இல்லை' என்றா என அவர்தான் அறிவார். சில சமயங்களில் கைகளைக் காற்றில் வீசுவார். மேலும் கீழுமாய்த் தலை ஆட்டினால் தம் பிரச்னை தீர்ந்துவிடுமென்றும், பக்கவாட்டில் ஆட்டினால் பிரச்னைக்குத் தீர்வே இல்லை என்றும்... கைகளை ஆட்டினால் அருளாசி வழங்குகிறார் என்றும்... முணுமுணுத்துக் கொண்டால் ஆண்டவனை நம்பு, கஷ்டங்கள் தீரும் என்றும்... இப்படி அவரின் அசைவுகளுக்கேற்ற வகையில் பக்தர்கள் பொருள் கண்டபடி திருப்தியுடன் செல்வார்கள். சில நேரங்களில் தல்பசாயி அல்லது வேறு பெரிய மனிதர்கள் அவைகளுக்குப் பொருள் எடுத்துச் சொல்லி, ஜனங்களைத் திருப்திப்படுத்துவார்கள்.

இந்த தல்பசாயிக்கும் பைத்தியத்திற்கும் என்ன சம்பந்தம் என்று மட்டும் புரியவே இல்லை. இதை தல்பசாயியிடமே கேட்டுவிட பலமுறை முயன்றும் முடியாமல் போனது. எப்போதும் அவனுடன் யாராவது இருப்பார்கள். தப்பித்தவறி தனியாகக் காணப்பட்டால் கேட்டால் என்ன நினைத்

தெலுங்கு மூலம்: கே.ஆர்.கே. மோகன்

தமிழாக்கம்: சாந்தா தத்

துக் கொள்வானோ என்ற தயக்கம். தன்னால் தெரிகிறது என்று விட்டுவிட நினைத்தாலும் 'கடவுள் நம்பிக்கையற்றவனா இப்படி...?' என்ற கேள்வி நெஞ்சை அரித்துக் கொண்டே இருந்தது.

மேலும் சில மாதங்கள் கழிந்தன. என் வாழ்க்கையிலும் சில பிரச்னைகள். எனக்கு மாற்றல் கிடைக்கும் போலிருந்தது. மனைவி சிடுசிடுத்தாள். நன்றாய் செட்டில் ஆகிவிட்ட இந்த ஊரை விட்டுப் போக எனக்கும் கொஞ்சம்கூட விருப்பமில்லைதான். அதுவும் பிரமோஷன் இல்லாத டிரான்ஸ்ஃபர். முடியாது என மனம் முரண்டு பிடித்தாலும் தப்பிக்க வழி இல்லை. வேறு மார்க்கமே இல்லையா என மண்டையைக் குடைந்து கொண்டிருந்த போது சட்டென பைத்தியக்கார சுவாமிஜியின் நினைவு வந்தது. என் எல்லைக்குட்பட்டவரை முயற்சி செய்தும் பலன் விளையாததால் அவர் கோடி காட்டினால் கிடைக்கும் சூசகத்திற்கேற்ப முயற்சி செய்யலாம் - அல்லது முயற்சியைக் கைவிடலாம். இந்தச் சாமியார்கள் அவர்களின் மகிமை மீதெல்லாம் எனக்குக் கொஞ்சம்கூட நம்பிக்கையில்லைதான். ஆனால் ஆனானப்பட்ட தல்பசாயியே பெரிய பக்திமான் ஆகிவிட்ட பிறகு, நான் ஒரே ஒரு சின்னக் கேள்வி கேட்பதில் என்ன தவறு என்று ஆறுதலடைந்தேன். என் கண்முன்னமே நூற்றுக்கணக்கானவர்கள் கேள்வி கேட்டிருக்கிறார்கள். எனக்கு அப்படிச் செய்யப் பிடிக்கவில்லை. சாமி தனித்திருக்கும்போது தல்பசாயியை மட்டும் உடனழைத்துக் கொண்டு போய்க் கேட்கத் தீர்மானித்தேன்.

ஞாயிற்றுக்கிழமை என்றால் தாமதமாகவே எழுந்திருப்பவன் அன்று அதிகாலையிலேயே எழுந்து தல்பசாயி வீட்டிற்குச் சென்றேன். லீவு நாளும் அதுவுமாய் பொழுது விடிந்தும் விடியாததுமாய் நான் அவனைத் தேடிச் சென்றது கண்டு மிகவும் வியப்படைந்தான்.

அரசியல், விலைவாசி, வெயில் என மாமூல் விஷயங்களைப் பேசி, காப்பி குடித்து... கொஞ்சம் தயங்கி... வந்த காரணம் சொன்னேன்.

மெல்ல இதழ் பிரித்துச் சின்னதாய்ச் சிரித்தான் அவன். ''அப்ப... நீ கூட பக்திமான் லிஸ்டில் சேர முடிவு செஞ்சிட்டே...''

''அடடா... நீயே பக்தி வெள்ளத்தில் மூழ்கியிருக்கே, நான் ஆனாத்தான் என்ன... இதற்கு நீதான் காரணம்...''

''அப்படியா...?'' நிதானமாய்க் கேட்டவன் கொஞ்சநேரம் எதுவும் பேசவில்லை. பிறகு கேட்டான். ''அதுசரி... அந்தப் பைத்தியம் யாருன்னு தெரியுமா உனக்கு?''

சுவாமிஜி என்று ராத்திரி பகலாய்த் துதி பாடிச் சேவை செய்கிறவன் இப்போது மரியாதை விடுத்துப் பைத்தியம் என்கிறானே... ஏன் இப்படிக் குழப்புகிறான்...? ஆனாலும் எதையும் வெளிக்காட்டாமல், ''எனக்கு என்ன தெரியும்...? இத்தனை காலமா, அதாவது சுவாமிஜி ஆகும் முன்னால் ஊர்த் தெருக்களில் பைத்தியமாய்த் திரிந்து கொண்டிருந்தது மட்டும்தான் தெரியும்...'' என்றேன்.

அவ்வளவு நேரம் சிரித்த முகத்துடன் பேசிக் கொண்டிருந்த தல்பசாயியின் முகம் சட்டென வாடிப் போயிற்று. விழிகளில் சோகம் நிறைந்தது.

''அந்தப் பைத்தியம் என் உடன் பிறந்த அண்ணன்...'' சலனமற்று வார்த்தைகள் உதிர்ந்தன. அத்தனை சலனமும் சஞ்சலமும் எனக்கு ஏற்பட்டது.



''என்னப்பா இது...! ஊர் அறிஞ்ச திருடனா இருந்துக்கிட்டு உன் மகனைப் போலீசுல சேர்க்கறே?''

''நான் விட்ட மாமூலைத் திரும்ப எடுக்க வேணாமா?''

- அம்பை தேவா

நீ சொல்வது நிஜந்தானா என்பது போல் அவனைப் பார்த்தேன்.

''இந்த விஷயம் ஊரில் யாருக்குமே தெரியாது. ஒரு பைத்தியக்காரனை அண்ணன் என யார்தான் சொல்லிக் கொள்வார்கள்?''

என்ன பேசுவதென்று தெரியவில்லை.

தல்பசாயி கதை சொல்வது போல் ஆரம்பித்தான்.

''அவர் என் கூடப் பிறந்த அண்ணன். காலேஜில் படித்துக் கொண்டிருந்தபோது திடீரென்று மூளை கோளாறாகிவிட்டது. ஏன், எதுக்குன்னு தெரியலே. எத்தனை சிகிச்சை உண்டோ ஒன்றுவிடாமல் செய்து பார்த்தோம். கடுகத்தனை குணம் கூடத் தெரியலே. திடீரென்று ஒருநாள் காணாமல்







- கு. அருணாசலம்

போனார். தேடித் தேடி அலைந்ததுதான் மிச்சம். கிடைக்கவே இல்லை. பேப்பரில் விளம்பரம் கொடுத்துப் பயனில்லை. எங்கள் குடும்பத்தில் அவர் இல்லாமலே காலம் கரைந்தது. கிடைப்பார் என்ற நம்பிக்கையும் கூடவே கரைந்தது. எனக்கு வேலை கிடைத்தது. கல்யாணம் நடந்தது. அப்பா அம்மா செத்துப் போனது எல்லாம் கலாக் கிரமத்தில் நடந்தேறின. எனக்கு இந்த ஊருக்கு டிரான்ஸ்ஃபர் ஆன கொஞ்ச காலம் கழித்து, யதேச்சையா ஒரு நாள் என் அண்ணனை இங்கே பார்க்க நேரிட்டது.

''நான் வலியச் சென்று பேசியும் அவர் என்னை இன்னாரென்று தெரிஞ்சுக்கலே. நெஞ்சுக்கடியில் புதைஞ்சு கிடந்த பாசம் குபீரென மேலுக்குக் கிளம்ப திக்குமுக்காடிப் போனேன். அவரை உடனே என் வீட்டுக்கு அழைச்சுக்கிட்டுப் போகணும்னு மனம் துடியாத் துடிச்சது. அதுக்கு என் மனைவி ஒத்துக்கலே... அவர் எனக்குத்தான் அண்ணனே தவிர, அவளுக்கில்லையே! என் வீட்டில் அவர் காலம் நல்லபடியாய்க் கழியும்னு என்ன உத்திரவாதம்...? இதையெல்லாம் நினைத்து அவரை வீட்டிற்கு அழைத்துச் செல்லும் முடிவை மாற்றிக் கொண்டேன். ஆனால் மனத்திற்குள் ஒரே இம்சை... அவஸ்தை. சாப்பாடு தொண்டையை விட்டு இறங்க மறுத்தது...'' நீளமாய்ப் பேசிக் கொண்டே போன தல்பசாயி உணர்ச்சிவசப்பட்டவனாய்க் கண்களைத் துடைத்துக் கொண்டான். நான் அவனையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

உணர்வுகள் சமனப்பட்டவனாய்ப் பேசுவதைத் தொடர்ந்தான்.

''ரத்தத் தொடர்பாச்சே... பாசம் அவ்வளவு இலேசில் போகுமா...? என்னால் முடிந்தது... சாப்பாடு கொடுக்க ஆரம்பிச்சேன். இதைக் கவனித்த ஜனங்கள் அவரிடம் ஏதோ மகிமை இருக்கிறதென்றும் அதற்காகவே நான் சேவை செய்ய ஆரம்பித்திருக்கிறேனென்றும் அவங்களாகவே முடிவு கட்டிக் கொண்டார்கள். அவர்கள் கருத்து ஊர் முழுக்கப் பரவிவிட்டது. என் பைத்தியக்கார அண்ணனுக்குக் கௌவரம், அந்தஸ்து கிடைத்தது. அப்ப எனக்குள்ளே ஓர் எண்ணம் வந்தது. இந்த ஜனங்களின் அறியாமையை, முட்டாள்தனத்தை எனக்குச் சாதகமாப் பயன்படுத்திக்கிட்டா என்ன என்று! அப்போதிருந்து அவர் மகிமையைக் குறித்து நானும் பிரசாரம் செய்ய ஆரம்பித்தேன். அவ்வளவுதான்... பழம், பலகாரம், காணிக்கை என வர ஆரம்பித்தன. அவைகளில் அண்ணனுக்குத் தேவையானது போக மீதியெல்லாம் தெய்வத்தின் பெயரால் பூசாரிக்குக் கிடைப்பதுபோல் எனக்குத்தான். அதற்குப் பிறகு நடந்ததெல்லாம் உனக்குத் தெரிந்ததுதானே...? ஆனால், உன் விஷயத்தில் என்னால் பார்த்துக்கிட்டு சும்மா இருக்க முடியலே. நீ கூட இந்த அறியாமைக் குழியில் விழணுமான்னு உள்ளது உள்ளபடி சொல்லிட்டேன். அவர் செய்கைகளுக்கு இந்த மூட ஜனங்கள் ஏதேதோ பொருள் கற்பித்துக் கொண்டார்களே தவிர, என் அண்ணனுக்கு எந்தச் சக்தியுமில்லே. மருந்து சாப்பிட்டாலும் சாப்பிடாவிட்டாலும் சில வியாதிகள் குணமாயிடறதுண்டு. மருந்து பலன் தந்தா வைத்தியனைத் தலைமேல் வைத்துக் கொண்டாடுவார்கள். குறையலேன்னா நம்ம விதி இப்படின்னு நொந்து கொள்வாங்க. இதே ரீதியில் நினைத்த காரியம் நிறைவேறிட்டா அது என் அண்ணனின் மகிமைன்னும் நடக்கலேன்னா நாம் வாங்கி வந்த வரம் இவ்வளவுதான்னும் நினைச்சுக்கறாங்க. என் அண்ணன் அப்போதும் பைத்தியம்தான். இப்போதும் பைத்தியம்தான்...'' என்றான் அமைதியாக.

## 72. ராம தூதன்

நந்தவனத்துக் தோரணவாயில் மேல் உட்கார்ந்திருந்த ஹனுமானைப் பார்த்தார்கள். இவர்களைக் கண்டதும் ஹனுமானுடைய காந்தியும் வடிவமும் பலமும் இன்னும் அதிகரித்தன. ''வந்தார்களா?'' என்று கீழே குதித்து வாலைத் தூக்கிப் பூமியில் ஓர் அடி அடித்துத் திக்குகள் நடுங்கும்படி கர்ஜித்தான். வாயிற் கதவில் வைத்திருந்த பெரிய இரும்புத் தாழ்ப்பாள் கட்டையைப் பிடுங்கி, அதைக் கொண்டு அவர்களைத் தாக்கி, அவ்வளவு பேர்களையும் எதிர்த்தான்.




குதித்துக் கிளம்பி இரும்புக் கட்டையைச் சுழற்றிச் சுழற்றி அத்தனை பேர்களையும் ஒருவர் பின் ஒருவராக வதம் செய்து விட்டு, மறுபடியும் அசோக வனத்து கற்கம்ப வாயில் மேல் உட்கார்ந்து, கர்ஜித்தான்.

''வாழ்க ராமன்! வாழ்க லக்ஷ்மணன்! வாழ்க ராஜா சுக்ரீவன்! அரக்கர்களே! உங்களுக்கு அழிவு வந்து விட்டது. வீரன் ராமனும் வீரன் லக்ஷ்மணனும் ராஜா சுக்ரீவனும் என்னை அனுப்பியிருக்கிறார்கள். பகைவர்களை நாசம் செய்ய நான் வந்திருக்கிறேன். ராக்ஷசர்களே, வாருங்கள்! ஆயிரம் ராவணர்களும் வரலாம். வதம் செய்ய நிற்கிறேன். சீதையைத் தலை வணங்கிப் பணிந்து ஆசி பெற்றேன். உங்கள் நகரத்தை இப்போது அழிக்கப் போகிறேன்!'' என்று லங்கை நடுங்கும்படி கர்ஜித்தான்.

வந்து தாக்கின அத்தனை கிங்கரர்களும் மாண்டார்கள். ராவணனுக்குச் செய்தி எட்டியதும் அவனுடைய கண்கள் பயங்கரமாக விரிந்தன.

''என்ன சொல்லுகிறீர்கள்?'' என்று கூறி விட்டு, உடனே நிகரற்ற வீரனான பிரஹஸ்தனுடைய மகனைக் கூப்பிட்டு, ''போய் இந்த வானரத்தின் கொட்டத்தை அடக்கி விட்டு வா!'' என்று உத்தர விட்டான்.

பிரஹஸ்தனுடைய குமாரன் ஜம்புமாலி என்னும் வீர ராக்ஷசன் கவசம் பூண்டு, ஆயுதங்கள் எடுத்துக் கொண்டு, அலங்காரம் செய்து கொண்டு வந்து சேருவதற்குக் கொஞ்சம் தாமதமாயிற்று. அது வரையில் ஹனுமான் சும்மா இருக்கவில்லை. பக்கத்தில் ஒரு பெரிய மண்டபத்தைக் கண்டு, அதன் மேல் ஏறி நின்றான். மேலே வானத்தில் இரண்டாவது சூரியன் உதித்தாற்போல் பிரகாசித்தான். தன் உடலை இன்னும் பெருக்கிக் கொண்டு, ஆகாயத்தில் ஒரு பொன் மயமான மலைத் தொடரைப் போல் விளங்கினான். அவன் போட்ட கர்ஜனை லங்கா நகரத்தில் எட்டுத் திசைகளிலும் எதிரொலி கிளம்பி, எங்கும் நிரம்பிற்று. அரக்கர்களின் உள்ளம் நடுங்கிற்று.

அவன் ஏறிய அந்த மண்டபத்துக் காவலாளிகள் 'இது வென்ன! பெருங் குரங்கு ஒன்று வந்து நம் தோட்டத்தை நாசமாக்குகிறதே!' என்று வெளியேறி ஹனுமானை எதிர்க்கப் பார்த்தார்கள்.

''ராமன் வாழ்க!வாழ்க லக்ஷ்மணன்! ராஜா சுக்ரீவன் வாழ்க! கோசலேந்திரனுடைய தூதன் நான். லங்கையை அழிக்க வந்திருக்கிறேன். ஹனுமான் என்கிற வாயு புத்திரன். பகைவர்கள் கூட்டத்தை நிர்மூலம் செய்ய வந்திருக்கிறேன். ஜானகியை வணங்கி ஆசி பெற்று நான் லங்கையை அழச் செய்ய வந்திருக்கிறேன். ஆயிரம் ராவணர்களை வெல்லும் பலம் பெற்றவன். மலைப் பாறைகளும் மரங்களும் பற்றி எறிந்து, அரக்கர் கூட்டதை அழிப்பவன், வந்திருக்கிறேன்.''

இவ்வாறு இலங்கையிலுள்ள அரக்கர்களின் ஈரல்கள் துடிக்கும்படி கர்ஜித்தான்.

உடனே அந்தக் கோயில் காவலாளிகள் பற்பல ஆயுதங்களைக் கொண்டு அவனைப் பலமாகத் தாக்கினார்கள். ஹனுமான் குதித்து அந்தக் கோயிலின் பெருங் கம்பம் ஒன்றைப் பிடுங்கி எடுத்து எமனைப்போல் நின்றான்.



● அன்பிருக்கிறதா உங்களிடம்? உங்களால் ஆகாத காரியம் ஒன்றுமே இல்லை. சுயநலத்தைத் துறந்தவர்களா நீங்கள்? உங்களை எதிர்க்கும் சக்தி எதுவுமில்லை. எங்கும் எப்போதும் ஒழுக்கமே பிரதானமானது.

- விவேகானந்தர்.

தகவல் : ஆர். பார்த்திபன்.

தங்கப் பூண்களால் அலங்கரிக்கப்பட்ட அந்தப் பெருந் தூணைச் சுழற்றிச் சுழற்றி ஹனுமான் அவர்களுடைய பாய்ச்சலைத் தடுத்து, அவர்களையும் வதம் செய்தான். அந்தக் கற்தூணை எடுத்ததும் மண்டபம் கீழே விழுந்தது. ஹனுமான் தூணைச் சுழற்றிச் சுழற்றி அடித்த வேகத்தினால் அது இங்கும் அங்கும் தாக்கி நெருப்புக் கிளம்பிற்று.

''என்னைக் காட்டிலும் பலமுள்ள வானரர்கள் சுக்ரீவன் தலைமையில் வரப் போகிறார்கள். உங்களையும் உங்கள் மன்னனையும் உங்கள் நகரத்தையும் அழித்து நிர்மூலமாக்குவதற்கு வரப் போகிறார்கள். இக்ஷ்வாகு நாதனுடைய பகைமையை உங்கள் அரசன் சம்பாதித்துக் கொண்டான் அல்லவா? ஒழிந்தது லங்கை. ஒழிந்தீர்கள் அரக்கர்காள்! ஒழிந்தான் ராவணன்! என்று கர்ஜித்தான்.

பிரஹஸ்தன் மகன் ஜம்புமாலியும் வந்து சேர்ந்தான். விரிந்த பெருங் கண்களும் பயங்கர கோரப் பற்களும் ரத்தம்போல் சிவந்த ஆடையும் காதில் குண்டலங்களும் கையில் வில்லும் கழுத்தில் மாலையும் இடுப்பில் கத்தியுமாக, இடியோசை செய்யும் தேரில் ஏறி வந்தான்.

பெருங் கோவேறு கழுதைகள் பூட்டிய தேரைக் கண்டான் ஹனுமான். அவனும் ஆயத்தமானான்.

தேரினின்று ஜம்புமாலி வில்லை வளைத்து, மாருதி பேரில் அம்புகள் எய்தான். அம்பு மாருதியின் முகத்தில் தைத்து ரத்தம் வழிந்தது. அது ஹனுமானுடைய முகத்தை இருமடங்கு அழகுறச் செய்தது. ஒரு செந்தாமரைப் பூ திடீர் என்று ஆகாயத்தில் மலர்ந்து விரிந்ததுபோல் காணப்பட்டது. அடிபட்ட மாருதிக்குக் கோபம் வளர்ந்து பெருகிற்று. அருகில் இருந்த ஒரு பெரிய பாறாங்கல்லை எடுத்துத் தேரின் மேல் வீசினான். பிறகு ஒரு ஆச்சா மரத்தைப் பிடுங்கி எடுத்து, அதைச் சுழற்றி ஜம்புமாலியின் மேல் எறிந்தான். பிறகு மண்டபத்திலிருந்து பிடுங்கி எடுத்த ஒரு இரும்புத் தடியை வேகமாகச் சுழற்றித் தேரின்மேல் எறிந்தான். தேர் இருந்த இடம் தெரியாமல் பொடியாய்ப் போயிற்று. ஜம்புமாலியின் பெருந்தேகம் நசுக்கப்பட்டு கை, கால், தலை ஏதும் உருப்படி தெரியாமல் எல்லாம் பிண்டமாய்ப் போயிற்று.

யுத்தத்தின் முடிவை ராவணனுக்குத் தெரியப் படுத்தினார்கள். அவன் வியப்படைந்து, ''இது என்ன புதிதாக இருக்கிறது? இது மிருகமல்ல, வானரமுமல்ல. இது என் பழைய பகைவர்களாகிய தேவர்களின் வேலை. ஒரு புதுப் பிராணியை உண்டாக்கி அனுப்பியிருக்கிறார்கள். இதைக் கட்டாயம் பிடித்து என் முன் கொண்டு வர வேண்டும்'' என்று பெரும் வீரர்களையும் அவர்களுக்குத் துணையாகப் பெரும் சேனையையும் அனுப்பினான்.

**ரா**க்ஷச வீரர்கள் தேரும் படைகளு மாகச் சென்றார்கள். மதில் வாயில் மேல் நின்று அட்டகாசம் பண்ணிக் கொண்டிருந்த ஹனுமானைப் பல மாகத் தாக்கினார்கள். அவனோ வஜ்ர தேகம் பெற்ற வாயு புத்திரன். எதையும் பொருட்படுத்தவில்லை. உடம்பில் காயம் பட்டு ரத்தம் பெருகப் பெருக அவன் கோபமும் அதனுடன் அவன் உடலும் வளர்ந்து வளர்ந்து அனை வரும் நடுங்கும்படியாக ஆகாயத்தில் கிளம்பிக் கிளம்பி, வந்த வீரர்களை யெல்லாம் முழுக் குன்றுகளும் முழு மரங்களும் எடுத்து வீசிக் கொலை செய்தான்.

திடீர் என்று தேர்களின் மேல் குதித்து, அவற்றைப் பொடியாக்கி னான். வந்த பெரும் வீரர்களையெல் லாம் வதம் செய்தான். படையாட்கள் பயந்து ஓடினார்கள். வந்தவர்கள் அனைவரையும் கொன்றும் துரத்தியடித் தும் லங்கா நகரத்து அரக்கர்கள் நடுங்கக் கர்ஜித்து விட்டு மறுபடியும் மதில் வாயிலின் கற்கூண்டின் மேல் உட்கார்ந் தான்.

**த**ன் பெரும் படைகளின் தோல்வி யையும் தேர்ந்தெடுத்து அனுப்பிய ஐந்து சேனாதிபதிகளின் வதத்தையும் அறிந்து, ராவணன் இப்போது உண்மை யில் பயந்தான்.

'இந்தத் தனி வானரம் இவ்வளவு பலமும் பராக்கிரமும் கொண்டு என் வீரர்களை அழித்தது சாதாரண நிகழ்ச்சி யல்ல. ஏதோ தேவர்களின் சூழ்ச்சி யாகக் காணப்படுகிறது' என்று கவலைப்பட்டான். ஆயினும் தன் கவலையை வெளிக்குக் காட்டாமல் சிரித்தும் பரிகசித்துமே வந்தான்.

தன் சபையிலிருந்தவர்களைச் சுற்றிப் பார்த்தான். தன் மகன் அக்ஷன் மிக உற்சாகமாக முன் நின்றான். யுத்தத் தில் மனம் கொண்டு நின்ற தன் வீர மகனைப் பார்த்து, அவனை உடனே ஹனுமானிடம் போகச் சொன்னான்.

இளஞ் சூரிய பிம்பத்தைப் போல் ஜொலித்த தங்கமயத் தேரின் மேல் எல்லா ஆயுதங்களையும் எடுத்துக் கொண்டு அக்ஷன் சென்றான்.

(தொடரும்)



"எங்க கணக்கு வாத்தியார் ரொம்ப பிராக்டிகலாவும் மனசுல பதிகிற மாதிரி யும் கணக்குத் தருவார்!"

"எப்படி?"

"ஒருத்தருக்கு ஒரு நாளைக்குச் சரா சரியா நூறு ரூபா லஞ்சம் கிடைச்சா, மார்ச் மாதத்துல எவ்வளவு லஞ்சம் கிடைக்கும்னு கேட்டாரே!"

- சீர்காழி வி. ரேவதி.

● ● ● ● ●

## சில பயங்கள்!



**மீ**ன் பற்றிய பயம்
மீன் சாப்பிடும் போதெல்லாம்....

எப்போதாவது வரும் தலைவலிக்கு
டாக்டர் புதுப்பெயர் சொல்லிடுவாரோ?

தெரிந்தவர் வீட்டுக்குப்
புதிதாய்ப் போனால்
நாய் இருக்குமோ?

நெருங்கிய உறவினர்
நெடுநாள் கழித்து வந்து பார்த்தால்
கடன் கேட்பாரோ?

'குரூப் ஸ்டடிக்குப் போய் வருகிறேன்' —
மகள் தினம் சொல்லிப் போகையில்
'லவ்' இருக்கலாமோ?

குடும்பத்தோடு ஊர் போய்த்
திரும்பிடும் சமயம்
வீடு உடைபட்டிருக்குமோ?

பொங்கல் தோறும்
வீடு சுத்தம் செய்யும் போது
'அவளின்' கிழிபடாத
பழைய கடிதம் ஏதும் சிக்கிடுமோ?

- ஆர். ரத்தினசாமி



கூட்டத்தின் ஒரு பகுதியினர்

# சட்டமன்ற காரசாரத்துடன் சிதம்பரம் வாசகர் சந்திப்பு!

''இந்தச் சிறப்பிதழ் ஓர் எல்லை ஓட்டத்தை ஆரம்பித்து வைத்திருக்கிறது...''

-கல்கி சிதம்பரம் நகரச் சிறப்பிதழ் குறித்து இப்படிச் சொன்னவர்... சிதம்பரம் சட்டமன்றத் தொகுதி உறுப்பினர் அழகிரி.

முக்கிய சாலையை ஒருவழிப் பாதையாக்க கோரிக்கை.



தனிப்பட்ட அழைப்பு ஏதும் இல்லாத போதிலும் சிதம்பரம் வாசகர் சந்திப்புக்கு வந்து, பங்கேற்று, இறுதி வரை இருந்து போனார் அழகிரி.

வாசகர்களிடமிருந்து புறப்பட்ட கருத்துக் கணைகளும் விமர்சன ஏவுகணைகளும் அழகிரி சொன்னதை உறுதிப் படுத்தின.

''நகரில் குறைகள் இருப்பதுதான் எல்லாருக்கும் தெரிகிறதே. அரசாங்கம்தான் அதையெல்லாம் சரி செய்ய வேண்டும் என்று காத்திருக்காமல், நாமே தலைக்குப் பத்து ரூபாய் போட்டு ஏன் சாலையைச் சரி செய்யக் கூடாது....?'' இளைஞர் சிவகுமார் இப்படிக் கேட்க,

''அதெப்படி! நாம் வரி கட்டுகிறோம்; பொதுப் பணிகளுக்கென்று அமைப்புகள் உள்ளன; அவை தங்கள் பணிகளைச் செய்யாவிட்டால் இருந்து என்ன பயன்?'' என்று வேறு சில வாசகர்கள் சாட,

நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கிய 'வெற்றியின் அப்பா' மெய்யப்பன், மத்தியஸ்தப் பணியில் இறங்க வேண்டியதாகிவிட்டது. மெய்யப்பன் மிகத் திறமையாகச் சமாளித்த இதர பல வாதங்களுள் சாம்பிளுக்குச் சில:

● ''கோயில் வெளிப் பிராகாரங்களில் அப்படியொன்றும் தூய்மைக் கேடாக இல்லை....''

''ஆமாம்! அப்படித்தான் இருக்கிறது; அதற்கும் நாமேதான் பொறுப்பு... நம்மைச் சேர்ந்தவர்கள் தானே அசுத்தம் செய்கிறார்கள்....''

● ''எங்கள் எம். எல். ஏ. வைக் கஷ்டப்பட்டுக் கண்டுபிடித்ததாக எழுதியிருக்கீங்க... அவர் மக்களைச் சந்திக்கக் குறிப்பிட்ட நேரத்துல எப்பவும் கிடைப்பார்...''

''இல்லை; இல்லை; நான் ஏழு முறை முயற்சி பண்ணியும் அவரைப் பார்க்க முடியவில்லை...''

● ''அட்டைப் படத்துல நீட்ரெர்களுக்கு முக்கியத்துவம் கொடுத்ததை ஏற்றுக்க முடியாது... நட

✱ தலைமை தாங்கிய 'வெற்றியின் அப்பா'



ராஜுவை அல்லவா போட்டிருக்கணும்''

''கவர் ஸ்டோரியின் சாராம்சத்தை உணர்த்திய படிவம் தான் அந்த அட்டைப் படம்.''

● ''குறைகள் சுட்டிக் காட்டப் பட்டுள்ளன... ஆனால் அவற்றுக்குப் பொறுப்பு அரசாங்க அமைப்பின் செயல் முறைதான். ஊழல் மலிந்துவிட்டது. இதை கல்கி சுட்டிக் காட்டி, அரசாங்கத்தைத் தட்டிக் கேட்டிருக்க வேண்டும்...''

(-இதைச் சொன்னவர் அழகிரிதான். கட்சிக் கண்ணோட்டத்தில் தாம் பேசவில்லை என்பதை அவர் மீண்டும் மீண்டும் வலியுறுத்திச் சொன்னார்)

● ''வாரா வாரம் அரசாங்கத்தைத் தட்டிக் கேட்டுக் கொண்டுதான் இருக்கிறது கல்கி. சிதம்பரம் சிறப்பிதழின் தலையங்கமே 'ஜெயலலிதாவுக்கு எச்சரிக்கை' என்ற தலைப் புடையது. எனவே கல்கி சரியான கண்ணோட்டத்தில்தான் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது...''

(இப்படிப் பேசிய கண்ணன் என்ற வாசகர் இந்நிகழ்ச் சிக்காகவே புதுவையிலிருந்து வந்திருந்தார்.)

நிகழ்ச்சித் தலைவர் மெய்யப்பன், ''நான் நீண்ட நாட்களாகச் சொல்ல நினைத்ததை, சொல்லத் துடித்ததையெல்லாம் இவ்விதழ் சொல்லியிருக்கிறது...'' என்று உணர்ச்சி வசப்பட்டுப் பேசினார். 50 ஆண்டுகளாகப் பத்திரிகைப் பணியில் ஈடுபட்டுள்ள கல்கியின் வாசகர் விழா, 175 ஆண்டுகளாக கல்விப் பணியில் சிறந்து வரும் பச்சையப்பன் மேல்நிலைப் பள்ளியில் நடைபெறுவது எவ்வளவு பொருத்தமானது என்பதையும் இவர் சுட்டிக் காட்டினார்.

✱ சிவகலாதரனுக்குப் பரிசு வழங்குகிறார் எம்.எல்.ஏ.



வாசகர்களுக்கு என்று எளிய போட்டி ஒன்று நடத்தப்பட்டது. 'சிதம்பரம்' என்ற ஒரு சொல்லுடன் தொடர்புடைய இதர சொற்களை ஒரு நிமிட நேரத்தில் எழுத வேண்டும். அதிகபட்ச சொற்கள் எழுதியது யார் என்று கவனமாகப் பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பு சிதம்பரம் எழுத்தாளர் ஆர்விகா நாசரிடம் விடப்பட்டது. பரிசு பெற்ற வாசகர் - சிவகலாதரன்.

போட்டியைப் பற்றி விளக்கிக் கொண்டிருந்த நேரத்தில்தான் எம்.எல்.ஏ. அழகிரி நிகழ்ச்சிக்கு வந்து சேர்ந்தார். போட்டி முடியும் வரை பார்வையாளராக இருந்ததுடன் கல்கி வாசகர் என்ற முறையில் (''கல்கியிடத்தில் எனக்கொரு தனிப் பிரியம் உண்டு'') அனைத்துலகச் செய்திகளும் ஒரு பக்கக் கதைகளும் மொழி பெயர்ப்புக் கதைகளும் இடம்பெற வேண்டும் என்று கருத்துச் சொன்னார்.

இளைஞர்களுக்கான பகுதி, இன்னும் நிறைய போட்டிகள், மீண்டும் 'சினி சிப்ஸ்', மருத்துவ, விஞ்ஞானக் கட்டுரைகள் போன்றவற்றை அதிகம் விரும்புவதாக இதர வாச



✱ சிதம்பரத்தின் இளம் தொழிலதிபர் சிவகுமார் மூத்த தொழிலதிபருக்கு மாலை அணிவிக்கிறார்.

கர்கள் சொன்னதோடு,கிடைத்த வாய்ப்பை நழுவ விடாமல் எம்.எல்.ஏ விடமும் தங்கள் முறையீடுகளை முன் வைத்தார்கள்.

சிதம்பரம் நகரச் சிறப்பிதழில், நகரப் பிரச்னைகளை உடனே கவனிக்கக் கோரி, கூப்பன் ஒன்றை வெளியிட்டு, அதைப் பூர்த்தி செய்து எடுத்து வரும்படி வாசகர்களைக் கேட்டிருந்தோம். சிதம்பரம் வாசிகளின் கையொப்பத்துடன் கூடிய அக் கூப்பன்களைத் தகுந்த அரசாங்க அதிகாரியிடம் சேர்ப்பிக்கும் பொறுப்பை ஏற்றிருந்தோம். மிகக் குறைவான வாசகர்களே கூப்பன்களைப் பூர்த்தி செய்து எடுத்து வந்திருந்தனர் என்பது ஏமாற்றத்தைத்தான் தந்தது. பிரச்னைகள் தீர வேண்டும் என்ற உணர்வு நமக்குள் இருந்தால் மட்டும் போதாது. ஒவ்வொருவரின் தனி உணர்வும் கூட்டாக வெளிப்படும்போது அற்புதமான வலுவும் மதிப்பும் அதற்கு உண்டு. நாம் நம்மளவில் ஒரு சிறு அடி எடுத்து வைக்கத் தயாராயில்லாத போது, நமக்காகப் பிறர் மலையையே பெயர்க்க வேண்டும் என எப்படி எதிர்பார்க்க முடியும்...?

சிதம்பரம் வாசகர்கள் சந்திப்பின்போது இந்த எண்ணம் எழுவதைத் தவிர்க்க முடியவில்லை. எனினும், வந்திருந்த வாசகர்கள் யாவரும் சுறுசுறுப்பாகச் சிந்திக்க ஆரம்பித்திருந்தார்கள் என்பது அனல் தெறித்த விவாதங்களிலிருந்து உறுதியாயிற்று. அப்படியொரு விவாதத்தின் போது,

''என்ன சார், சட்ட சபையில் இருப்பது போலவே இருக்கா...?'' என எம்.எல்.ஏ. விடம் நாம் கேட்க,

''இல்லையில்லை... இங்க நீங்க பேச விடறீங்களே...'' என்று போட்டாரே ஒரு போடு, அந்த காங்கிரஸ் எம்.எல்.ஏ.!

– சீதாரவி

படங்கள்: கோபிநாத்

# தில்லைக் கோயில்; பிறகு, எல்லைக்கோயில்!



✱ தில்லைக் காளி கோயில் முகப்புத் தோற்றம்.

காளி தேவி உக்ரமே உருவாகவும், சாந்த சவரூபிணியாகவும் இருவிதத் தோற்றங்களில் காட்சி அளிப்பது தில்லையின் எல்லையில். எல்லைக் காளி என்றும் இந்த தில்லைக் காளிக்குப் பெயர் உண்டு.

பரமசிவனிடம் ஆடல் போட்டியில் தோற்றதால் கோபமுற்று ஊர் எல்லைக்குப் போய் அவள் அமர்ந்ததாகவும் பின்னர் சிவபெருமானே அவளைச் சாந்தமடையச் சொன்னதாகவும், தொடர்ந்து விஷ்ணுவும் பிரம்மாவும் வணங்கித் துதித்து, சிவனும் சக்தியும் சேர்ந்து உலக இயக்கத்தை மீண்டும் மேற்கொள்ள வேண்டும் என வேண்டியதாகவும் புராணம்.

சிதம்பரம் நடராஜரை தரிசிக்கச் செல்வோர் தில்லைக் காளியையும் தரிசித்தால்தான் முழுப் பலன் அடைவார்கள் என்பது ஐதீகம். மூன்றாம் குலோத்துங்க மன்னனுடைய படைத்தலைவனும் பல்லவ சிற்றரசனுமான கோப்பெருஞ்சிங்கன் (1229-1278) இக்கோயிலைக் கட்டியதற்குச் சரித்திரச் சான்றுகள் உள்ளன.

# சிதம்பரத்தில் ஒரு ஜி.டி. நாயுடு!

''சிதம்பரத்தின் ஜி.டி. நாயுடுன்னு உங்களைப் பத்தி ஊர் ஜனங்க எழுதியிருக்காங்க...''

''அதெல்லாம் ஒண்ணும் இல்லை. நான் ஒண்ணும் பெரிசா செய்யலை...''

அடக்கத்துடன் கூறுகிறார் அகோரம். சிதம்பரத்தில் உள்ள எடிசன் எலக்ட்ரிகல் வொர்க்ஸின் அதிபர். கடைசி குண்டூசி வரை இடம் மாறாத கச்சித அறை. மேஜைக்குப் பின் சட்டையணியாத அதிபர்!

''உங்க தொழிற்சாலையில் என்ன செய்யறீங்க....?''

''என்ஜினியரிங் கருவிகள்லாம் சீர் செய்வோம்.... மெக்கானிகல், எலக்ட்ரிகல், எலக்ட்ரானிக் சர்வீஸிங் - மூணும் செய்வோம்...''

''எடிசன் என்கிற பேரு...''

''எனக்கு எடிசனை ரொம்பப் பிடிக்கும். School drop out. அவரைப் பற்றிய விவரங்களை அஞ்சு விளம்பரங்களாகத் தயாரிச்சு ஹிந்துவுல வெளியிட்டேன். எங்க நிறுவனத்துக்கு நான் செஞ்ச விளம்பரம் அது மட்டும்தான். பல திசைகளிலேர்ந்தும் அதைப் பாராட்டி எழுதினாங்க.''

அவர் எடுத்துக் காட்டுகிற அந்த விளம்பரங்களில் ஒன்று, 'சிதம்பரம் வாசிகள் நல்ல உழைப்பாளிகள் - இவர்கள் மனம் வைப்பதால்தான் எடிசன் எலக்ட்ரிகல் வொர்க்ஸ் வாடிக்கையாளர்களைத் திருப்திப் படுத்த முடிகிறது' என்று முழங்குகிறது....!

''எப்படி? எப்படிச் சொல்றீங்க?''

''சரியான ஆளுங்களைத் தேர்ந்தெடுக்கறேன். அஞ்சாவதோ, எட்டாவதோ படிச்ச ஃபெயிலானவனாயிருக்கணும்! அவனுக்கு வேலையோட, பண்பாடும் சொல்லித் தரேன். எங்கிட்ட வேலை செய்யறவங்க எல்லாருக்கும் வீட்டு வசதி செய்து கொடுத்திருக்கேன். இன்ஷூரன்ஸ் எடுத்திருக்கேன். அவங்க போனஸையும் உபரி சம்பளத்தையும் சேர்த்து அவங்களுக்கே நிலம் வாங்கிக் கொடுத்திருக்கேன். ஒரே குடும்பமா இருக்காங்க. அதனால வேலையும் சிறப்பா நடக்குது....''

அலுவலகச் சுவரின் கண்ணாடி அலமாரியில ஐ.ஐ.டி. கரக்பூர், அண்ணாமலை பல்கலைக் கழகச் சான்றிதழ்கள். அறைக்கு வெளியே உயரப் பரண்களில் ஏறத்தாழ கால் நூற்றாண்டுக்கு முந்தைய டேபிள் ஃபேன்கள்!

''முதல்ல டேபிள் ஃபேன்களைத் தான் ரிப்பேர் பண்ணினேன். ஒரு முறை நாம செய்து குடுத்தா, திரும்பவும் கோளாறு வரக்கூடாதுன்னு எனக்கு நானே ஒரு நிபந்தனை போட்டுக்கிட்டேன். அதனாலே என் வேலை எல்லாருக்கும் ரொம்ப பிடிச்சுப் போச்சு. போகப் போக வேற ரிப்பேர் வேலைகள் வர ஆரம்பிச்சது. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துல வேலையை விட்டுட்டு முழு நேரம் இதுல இறங்கிட்டேன்... யாருமே டெஸ்ட் பண்ண பயந்த ரொம்ப சக்தி வாய்ந்த டிரான்ஸ்ஃபார்மர்களையெல்லாம் ரிப்பேர் பண்ணி, டெஸ்ட் பண்ணினோம். எதையுமே எப்படி, எப்போ, ரிப்பேர் ஆச்சுன்னு தீர விசாரிச்சுட்டு வேலை தொடங்கினா கச்சிதமா, திரும்பவும் ரிப்பேர் ஆகாம சரி செய்துடலாம்னு உறுதியாச்சு.''

குரலில் அமைதியையும் மீறி ஒரு உத்வேகம் தொனிக்கிறது!

– எஸ். ஆர்.



* அகோரம்

கடந்த 22.2.94 அன்று காலமான ஜி. அகோரம் அவர்களுக்கு அஞ்சலி.



●● "கர்நாடகம் பூராவும் டூர் அடிக்க ஆரம்பித்துவிட்டார் பங்காரப்பா. போகுமிடங்களிலெல்லாம் நல்ல கூட்டம். இத்தனை கூட்டத்தை பங்காரப்பாவே எதிர்பார்க்கவில்லை எனில், மொய்லி எப்படி எதிர்பார்த்திருக்க முடியும்? பங்காரப்பாவுக்கு என்ன இத்தனை கூட்டம்? அவரது புதுக்கட்சி காங்கிரஸின் வாய்ப்புகளை பாதிக்குமா?"-என்று மொய்லியிடம் நிருபர்கள் கேட்டபோது, ஒருகணம் துணுக்குற்ற மொய்லி, பளிச்சென்று சொன்னார்: "அதெல்லாம் ஒன்றுமில்லை. கர்நாடகத்தின் மிக மோசமான ஊழல் முதல்மந்திரி எப்படியிருப்பார் என்பதைப் பார்ப்பதற்காகக் கூடுகிறார்கள் என்று நினைக்கிறேன்!" ஆனால், பங்காரப்பா சென்ற இடங்களுக்கெல்லாம் பின்னாலேயே மொய்லியும் டூர் அடிப்பதைப் பார்க்கும்போது காங்கிரஸ் வட்டாரம் முன்னாள் முதல் மந்திரியால் கொஞ்சம் கலங்கியிருக்கிறது என்றுதான் தோன்றுகிறது.

# பங்காரப்பாவுக்கு ஏன் இவ்வளவு கூட்டம்!

●● பெங்களூர்ப் பள்ளிகளில் தமிழ் மற்றும் உருது போன்ற மொழிகள் கற்பிக்கப்படுவதைத் தடுக்க நினைத்த கர்நாடக அரசு, கோகாக் கமிட்டியை நியமிக்க, 'எங்கும் கன்னடம் எதிலும் கன்னடம்' என்ற அறிக்கையைத் தந்தது, அந்தக் கமிட்டி. இதனை அப்படியே நடைமுறைப்படுத்த முனைந்த அரசாங்கம், 'கன்னடம் இந்த மாநில மக்களின் தாய்மொழி. தாய்மொழிக் கல்வி கற்பிப்பதுதான் சிறந்தது'- என்ற ரீதியில் வாதாடவே கோர்ட்டுகளும் ஒப்புக் கொண்டன. உடனே "தாய்மொழியில் தான் துவக்கப்பள்ளி பயிற்சி வகுப்புகள் இருக்கும்" என்று சட்டம் போட்டு விட்டது அரசு. இங்கு வாழும் மற்ற மொழிக்காரர்கள் 'நம்முடைய பிள்ளைகள் நம்முடைய தாய்மொழியிலேயே படிக்க வாய்ப்பு' என்று 'தாய் மொழிக் கல்விக்கு' விண்ணப்பித்தனர். 'நாங்கள் தாய் மொழி என்று சொன்னது மாநில மொழியான கன்னடத்தைத்தான்' என்ற கர்நாடக அரசின் வாதம் கோர்ட்டுகளில் எடுபடாமல் போகவே, அரசாங்கத்திற்குச் சங்கடம். அரசாங்க நிதியுதவி பெறாத பள்ளிகள் மட்டும் சுமார் மூவாயிரத்துக்கும் மேற்பட்டவை உள்ளன. தாய்மொழிக் கல்வி என்று வந்தால் கன்னடம் தவிர தமிழ், தெலுங்கு, உருது, மராத்தி...ஆகிய மொழிகளுக்கும் ஆசிரியர்களை நியமிக்க வேண்டும். புதிய ஆசிரியர்கள் நியமனம் மட்டுமே பதினைந்தாயிரத்தைத் தாண்டலாம். தவிர, ஒவ்வொரு பள்ளியிலும் கூடுதலாக நான்கு அல்லது ஐந்து வகுப்பறைகள் கட்டப்பட வேண்டும். நான்கைந்து மொழிகளில் எல்லாப் பாடங்களுக்கும் நூல்கள் வெளியிட வேண்டும். 'ஒன்லி கன்னடம்'- என்ற திட்டம் என்னாவது? சட்ட ஓட்டைகளைத் தேடிக் கொண்டிருக்கிறது அரசு!

பெங்களூரிலிருந்து:
பெர்னாண்டஸ்.



"டேய்! ரிடையரான ஏட்டு வந்து நிக்கிறார், என்னன்னு கேளு!"
"மாமூலுக்கு பென்சன் ஏதும் உண்டான்னு கேக்கிறார், வாத்யாரே!"

- எம். பர்வதவர்த்தினி

**திருச்சி ஆர்.இ.ஸி. கல்லூரியில் அரசு ஆணையின்படி ஒரு முதல்வரும், உயர்நீதி மன்றத் தீர்ப்பின்படி மற்றொரு முதல்வரும் ஒரே சமயத்தில் பொறுப்பில் இருந்து கொண்டு, குழப்பத்தை ஏற்படுத்தியதாக சமீபத்தில் பத்திரிகைச் செய்தி ஒன்றைப் படிக்க நேர்ந்தது. அதற்கும் இதற்கும் சம்பந்தமில்லை.**

**அது – நடந்தது. இது – எதிர்காலத்தில் ஏதாவது ஒரு காலேஜில் நடந்தாலும் நடக்கக் கூடியது.**

## காட்சி – 1

**(முதல்வர் முனுசாமி தன் பி.ஏ.வுடன் கெடுபிடியாகப் பேசிக் கொண்டிருக்கிறார்.)**

**முனுசாமி** : இதோ பாருங்க மிஸ்டர். நான் ரொம்ப ஸ்ட்ரிக்டான ஆள். என் மனசாட்சிப்படி எது சரியோ அதைத்தான் செய்வேன்.

**பி.ஏ.** : அதனாலே பரவாயில்லை ஸார். மனுஷன்னா குறை இருக்கத்தானே செய்யும்? உங்க வீக்னஸ்ஸை இப்படி வெளிப்படையாச் சொல்றது எனக்கு ரொம்பப் பெருமையா இருக்கு ஸார்.

**முனுசாமி** : எவனாவது அட்மிஷன் வேணும்னு ரெகமன்டேஷனோட வந்தா உள்ளே அனுப்பாதீங்க. தொலைச்சுடுவேன் தொலைச்சு.

**பி.ஏ.** : உங்க ஒய்ஃப் ரெகமன்டேஷனைக் கூடவா ஸார்?

**முனுசாமி** : எனக்கு இன்னும் கல்யாணமே ஆகலை, மிஸ்டர்.

**பி.ஏ.** : பிரச்னையில்லாத ஆள் ஸார் நீங்க. இவ்வளவு தைரியமாப் பேசும் போதே நினைச்சேன்.

## காட்சி – 2

**(ஒரு ஆள் உள்ளே வருகிறார். கையில் ஒரு பேப்பரை வைத்திருக்கிறார்.)**

**பி.ஏ.** : யார் ஸார் நீங்க? என்ன வேணும்?

**ராமசாமி** : என் பேர் ராமசாமி. ராமுன்னு கூப்பிடுவாங்க. ஆனா நீங்க யாரும் அப்படி கூப்பிடக் கூடாது. ஏன்னா, இன்னையிலேர்ந்து நான்தான் இந்த காலேஜுக்கு பிரின்ஸ்பால்.

**பி.ஏ.** : (திகைப்புடன்) பிரின்ஸ்பாலா?

**ராமசாமி** : பிரின்ஸ்பால்னு சொல்லிட்ட பிறகு, மறுபடியும் பிரின்ஸ்பாலான்னு கேட்டா என்னய்யா அர்த்தம்? ஒவ்வொரு விஷயத்தையும் ரெண்டு ரெண்டு தடவை சொல்லிக்கிட்டிருக்க முடியுமா நான்?

**பி.ஏ.** : இல்லே ஸார். இங்கே ஏற்கெனவே ஒரு பிரின்ஸ்பால் இருக்கார். லஞ்சுக்குப் போயிருக்கார்.

**ராமசாமி** : அவரை டிஸ்மிஸ் பண்ணியாச்சு. இதோ பாருங்க கவர்மெண்ட் உத்தரவு. நான் வீட்டிலே போய் உட்கார்றேன். டிஸ்மிஸ் ஆன ஆளுங்களை உள்ளே விட்டே, உன்னை டிஸ்மிஸ் பண்ணிடுவேன்.

**(ராமசாமி பிரின்ஸ்பாலின் அறைக்குள் நுழைந்தவுடன் முனுசாமி வருகிறார்.)**

**முனுசாமி** : யார் கூட பேசிக்கிட்டிருந்தீங்க? அட்மிஷன் கேட்டு வந்த ஆளா?

# 'ரெண்டு பிரின்ஸி போதுமா? மேலும் ஒண்ணு வேணுமா?'

**பி.ஏ.** : வந்து கவர்மெண்ட்.... முதல்வர்... ஆர்டர்.

**முனுசாமி** : முதல்வர் ரெகமன்டேஷனா? அதெல்லாம் முடியாது. எதுவா இருந்தாலும் ரூல்ஸ்படிதான் நடப்பேன்னு சொல்லி அனுப்பிடுங்க.

**பி.ஏ.** : சொல்லிப் பார்த்துட்டேன் ஸார். போக மாட்டேன்னு உட்கார்ந்திருக்கார்.

**முனுசாமி** : கூப்பிடுங்க அந்த ஆளை. நான் வெளியே நிக்கும்போது அவரை எதுக்கு என் ரூமுக்குள்ளே அனுப்பிச்சீங்க?

**பி.ஏ.** : (உள்ளே போய்விட்டு வந்து) ஸார்... அவர் உங்களை உள்ளே கூப்பிடறார்.

**முனுசாமி** : வாட் நான் சென்ஸ்?



*(கோபத்துடன் உள்ளே செல்ல, ராமசாமி பிரின்ஸ்பாலின் ஸீட்டில் உட்கார்ந்திருப் பதைப் பார்த்து துணுக்குறுகிறார்.)*

ராமசாமி : மிஸ்டர் முனுசாமி, ஸாரி டு மீட் யூ! ஐயம் ராமசாமி. பிரின்ஸ்பாலா சார்ஜ் எடுத்துக்கிட்டேன். உங்களுக்குச் சேர வேண்டிய சம்பள பாக்கிய பி.ஏ. கிட்டே கேட்டு வாங்கிட்டுப் போங்க. ஆல் தி பெஸ்ட்! ஸீ யூ!

முனுசாமி : என்ன உளர்றீங்க? நான் தான் இந்த காலேஜோட பிரின்ஸ்பால். மிஸ்டர் பி.ஏ.... இதுதானே கோவிந்தப்பா காலேஜ்? போய் போர்டைப் பாத்துட்டு வாங்க.

பி.ஏ. : ஐயம் ஷ்யூர் ஸார். இதான் கோவிந்தப்பா காலேஜ்.

முனுசாமி : பின்னே இந்த ஆளுக்குப் பைத்தியமா? பிரின்ஸ்பால் ஸீட்லே உட்கார்ந்திருக்காரே! நான்தானே அங்கே உட்காரணும்? முதல்லே அவரை எழுப்பி வெளியே அனுப்புங்க. இல்லே உங்க மேலே ஆக்ஷன் எடுப்பேன்.

ராமசாமி : மிஸ்டர், என்ன தைரியம் இருந்தா என் எதிர்லேயே என் பி.ஏ.வை மிரட்டுவீங்க?

முனுசாமி : உங்க பி.ஏ. வா? என்ன உளர்றீங்க? அவர் என்னோட பி.ஏ. நான் அவரோட பிரின்ஸ்பால்.

ராமசாமி : நேத்து கதையைப் பேசா தீங்க. இன்னைக்கு வேறே G.O. வந்தாச்சு. இனிமே நான்தான் இங்கே பிரின்ஸ்பால்.

முனுசாமி : என்னையும் கவர்மெண்ட் தான் நியமிச்சது.

ராமசாமி : அது பழைய கவர்மெண்ட். நீங்க பழைய பிரின்ஸ்பால்.

## காட்சி – 3

*(பேராசிரியர்கள் மீட்டிங்கில் ராமசாமி உரையாற்றுகிறார்.)*

ராமசாமி : ஆகவே 135, துணை விதி (C) படி நான்தான் ஒரிஜினல்.... பிரின்ஸ்பால். போலிகளைக் கண்டு ஏமாறாதீர்கள் என்று கூறிக் கொண்டு....

(முனுசாமி பரபரப்புடன் ஓடி வருகிறார்.)

முனுசாமி : என்ன கூட்டம் இது? ஸ்டுடண்ட்ஸை கவனிக்காம இங்கே கூத்தடிச்சுக்கிட்டிருக்கீங்களா? காலேஜ் அடங்கு சட்டம் உடனடியா அமலுக்கு வருது. நாலு பேருக்கு மேலே ஒண்ணாச் சேர்ந்து வெளியே வரக் கூடாது.

ராமசாமி : மிஸ்டர், யாரைக் கேட்டு உள்ளே வந்தீங்க? பி.ஏ. அந்த வாச்மேனுக்கு சஸ்பென்ஷன் ஆர்டர் குடுங்க.

முனுசாமி : நான் வாச்மேனைக் கேட்டு வரலை. ஹைகோர்ட்டைக் கேட்டுக்கிட்டுத் தான் உள்ளே வந்தேன்.

ராமசாமி : அப்ப ஹைகோர்ட்டை சஸ்பெண்ட் பண்றேன்.... வாட்? ஹைகோர்ட்டா?

முனுசாமி : ஆமா, இதோ பாருங்க. ஸ்டே ஆர்டர். நீங்களா வெளியே போறீங்களா? இல்லே காவலர்களைக் கூப்பிடட்டுமா?

ராமசாமி : ஹைகோர்ட்டைப் பத்தி எனக்குக் கவலை இல்லை. ஹைகோர்ட்டா எனக்குச் சம்பளம் கொடுக்குது?

முனுசாமி : நீங்க கோர்ட்டை அவமதிக்கறீங்க.

ராமசாமி : நீங்க கவர்மெண்டை அவமதிக்கறீங்க. கவர்மெண்ட்லே சம்பளம் வாங்கிக்கிட்டு ஹைகோர்ட் பேச்சைக் கேக்கறீங்க.

முனுசாமி : கவர்மெண்ட்டை விட கோர்ட்டுதான் பெரிசு.

ராமசாமி : கோர்ட்டை விட பீச்சுதான் பெரிசு. அதுக்காக, கண்டல் விக்கறவன் பேச்சைக் கேக்க முடியுமா?

(பேராசிரியர்கள் திகைத்து நிற்கிறார்கள். மாணவர்கள் விசிலடித்து ரசிக்கிறார்கள்.)

## காட்சி – 4

(முனுசாமி பெல் அடித்து பி.ஏ. வைக் கூப்பிடுகிறார்.)

முனுசாமி : பி.ஏ... 18 ம் தேதி காலேஜ் டே ஃபங்ஷன் இருக்குன்னு எல்லாருக்கும் சர்க்குலர் அனுப்பியாச்சா?

பி.ஏ. : அனுப்பிட்டேன் ஸார். 'ஃபங்ஷன் கேன்ஸல்; 18 - ம் தேதி லீவு'ன்னு அந்த பிரின்ஸ்பால் சர்க்குலர் அனுப்பச் சொன்னார். அதையும் அனுப்பிட்டேன். ரெண்டு சர்க்குலரும் கிடைச்சிருக்கும்.

முனுசாமி : 18 -ம் தேதி லீவா? அதெல்லாம் முடியாது. ஃபங்ஷன் அட்டெண்ட் பண்ணாதவங்களுக்கு டி.ஸி. கிழிச்சுக் குடுத்துடுவேன்.

பி.ஏ. : 18 - ம் தேதி யாராவது காலேஜுக்கு வந்தா டி.ஸி. கிழிச்சுக் குடுத்துடுவேன்னு அந்தப் பிரின்ஸ்பால் சொல்லியிருக்கார் ஸார். எல்லாருடைய டி.ஸியையும் கிழிச்சு ரெடியா வெச்சிருக்கேன்.

முனுசாமி : சே! இப்படி இடைஞ்சல் பண்ணிக்கிட்டேயிருந்தா நான் எப்படி காலேஜ் நடத்தறது?

பி.ஏ. : அவரும் இப்படித்தான் ஸார் கோவிச்சுக்கிறார்.

(ராமசாமி பெல் அடித்து பியூனைக் கூப்பிடுகிறார்.)

ராமசாமி : ப்ரொபஸர் நமசிவாயத்தைக் கூப்பிடுங்க.

பியூன் : அவர் நீங்க கூப்பிட்டா வரமாட்டார் ஸார். அவர் அந்தப் பிரின்ஸ்பாலோட கோஷ்டி. உங்க கோஷ்டி ப்ரொபஸரைக் கூப்பிடட்டுமா?

ராமசாமி : கோஷ்டியா?

பியூன் : ஆமா ஸார். உங்க பக்கம் நாலு ப்ரொபஸர், ஏழு லெக்சரர், ஐநூறு மாணவர்கள்தான் இருக்காங்க. அவர் கோஷ்டியிலேதான் அதிகமான ஆளுங்க.

ராமசாமி : (பி.ஏ.வைப் பார்த்து) ஓஹோ! முதல்லே அந்த கோஷ்டி ஆளுங்களை எல்லாம் நம்ம பக்கம் இழுங்க. எவ்வளவு செலவு ஆனாலும் பரவாயில்லை. 10 - ம் தேதி எக்ஸாமுக்கு கொஸ்சன் பேப்பர் எல்லாம் ரெடியா?

பி. ஏ. : 10 -ம் தேதி எக்ஸாம் கிடையாது ஸார். எக்ஸ்கர்ஷன். அந்த பிரின்ஸ் பால் உத்தரவு. உங்க கோஷ்டி ஆளுங்க அன்னைக்கு எக்ஸாம் எழுதுவாங்க. அவர் கோஷ்டி ஆளுங்க எக்ஸ்கர்ஷன் போவாங்க. நடு நிலையா இருக்கிறவங்க எக்ஸ்கர்ஷனுக்குப் போய் எக்ஸாம் எழுதுவாங்க.

## காட்சி – 5

பியூன் : ஸார், பிரின்ஸ்பால் உங்களைக் கூப்பிடறார்.

ப்ரொபஸர் : இப்படி மொட்டையாச் சொன்னா என்ன அர்த்தம்? ஹைகோர்ட் பிரின்ஸ்பாலா? கவர்மெண்ட் பிரின்ஸ்பாலா?

பியூன் : ரெண்டும் இல்லை. சுப்ரீம் கோர்ட் பிரின்ஸ்பால்.

ப்ரொபஸர் : ஐயையோ! அது வேறேயா?

பியூன் : கவர்மெண்ட் உத்தரவு சரியா, ஹைகோர்ட் உத்தரவு சரியான்னு சுப்ரீம் கோர்ட் விசாரிக்குது. தீர்ப்பு வெளியாகும் வரை வேறே ஒருத்தரை 'கேர்டேக்கர்' என்ற முறையிலே அனுப்பியிருக்கு. மூணு பேரும் கான்ஃபரன்ஸ் ஹால்லே காரசாரமா விவாதம் பண்ணிக்கிட்டிருக்காங்க!

ESTD 1955 ஸ்ரீ Phone : 24823




33 நாட்கள் கொண்ட இமாலய

பத்ரிநாத், கேதார்நாத், நேபாள்,பசுபதிநாத்

# காசி யாத்திரை

9.5.94, 10.5.94, 15.7.94 ஆகிய தேதிகளில் சென்னையிலிருந்து நித்திரை வசதிகொண்ட 3Tier Sleeper கோச்சுகள் புறப்படுகிறது. யாத்திரை மார்க்கம்:- சென்னை சோலாப்பூர்-பண்டரீபுரம், பம்பாய் ஆக்ரா-மதுரா- அரித்வார்-ரிஷிகேஷ்-பத்ரிநாத்-கேதார்நாத், அரித்வார், அலகாபாத்-அயோத்யா-ஸ்ரீகாசி, நேபாள்-காத்மாண்ட், கயா-கல்கத்தா-பூரி சர்வம் ஜெகந்நாதம். விஜய வாடா வழியாகச் சென்னை வந்து சேருகிறது.

கட்டணவிவரம் : 2ஆம் வகுப்பு ரயில் டிக்கட், முழுபர்த் வசதி, காலை காபி, டிபன், மாலை காபி,2 வேலை போஜனம், முக்கிய நகரங்களை சுற்றிப் பார்க்கும் பஸ் கட்டணம் ரயில் கோச்சிலேயே தங்கும் வசதி கட்டணம் உள்பட நபருக்கு ரூ.6575/- பத்ரி நாத்-கேதார்நாத்-நேபாள் யாத்திரைக்கு பஸ் சார்ஜ் ரூ.1700 தனி. நபருக்கு ரூ.1500 வீதம் அட்வான்ஸ் தொகையை செலுத்தி ரிசர்வ் செய்து கொள்ள வேண்டும். 6 நபர்கள் கொண்ட ஒரே குடும்பத்தினருக்கு தனி ரூம் கிடைக்கும்.

பல ஆண்டுகளாக தொடர்ந்து நடத்திவரும் எமது ஸ்தாபனத்தின் மூலம் இதற்கு முன் யாத்திரைக்கு போய் வந்த நன்றி மறவாத பெரியோர்களின் ஆசியினால் இந்த யாத்ராஸ் பெஷலில் பதிவு செய்துள்ள அன்பர்கள். தூத்துக் குடி திரு எஸ்.வி.எஸ்.நடராஜ் குடும்பத்தினரும். தென்காசி பாலூர் சத்திரம் திரு எம்.கே.வி.கே. பால்ராஜ் வசந்தி தம்பதியர் மானாமதுரை திரு எஸ். ஜவஹர்லால்-சரோஜா தம்பதியர், காரமடை, திரு ஆர்.பொன்னுசாமி-லட்சுமி தம்பதியர், கோவை திரு கே.நடராஜன்-ருக்மணி தம்பதியார், திரு. ஜி. நாகராஜன்-வேதவல்லி தம்பதியர், சென்னை எழும்பூர் திருமதிகள் என். சகுந்தலா-ருக்மணி, ராஜபாளையம் ராஜ்குமார் வெீவிக், திரு எஸ்.டி. குமாரசாமி ராஜா, ராஜலட்சுமி தம்பதியர் திரு பி.எம்.பாலகிருஷ்ண ராஜா ஆனந்தம்மாள் தம்பதியர், திரு. பால்ராஜ்-ராஜம்மாள் தம்பதியர் திரு பி.எஸ். துரை அழகுராஜா-சீதாலட்சுமி தம்பதியர். பூவம்மாள்-தாயம்மாள், திரு எஸ்.எஸ். ராமகிருஷ்ணராஜா, கப்பு லட்சுமி தம்பதியர், 8வயது சிறுமி எஸ். ஆர்.சிமாவலி, திருமதிகள் என்.ராஜலட்சுமி, ஆனந்தம்மாள், கே.ஆனந்தம்மாள், திரு ஜி.எஸ்.துரைசிங்க ராஜா-ஸ்ரீரங்கம்மாள் தம்பதியர் திரு கே.ஜெயராமராஜா, ஜீவரேகா தம்பதியர், திரு ஆர்.பெருமாள்ராஜா, திரு கே.எஸ்.துரை வெங்கட்டராஜா, திரு கிருஷ்ணமராஜா துணைவியார் கே.பாரதி அம்மாள், சேலம் திரு வாக்கவுண்டனூர் திரு ஏ.மாணிக்க வாசகம் தம்பதியர், கோவை சக்தி ஜ்வல்லர்ஸ் திரு ஏ.ராஜகோபால் குடும்பத்தினரும் சேர்ந்துள்ளார்கள் என்பதை பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறோம் மேற்கொண்டுவரும் அன்பர்கள் உடன் பதிவு செய்து கொள்ள வேண்டுகிறோம்.

உங்கள் டிக்கட்டுக்களை பதிவு செய்துக் கொள்ள அணுகவும் :

ஸ்ரீ ஏ.ராஜகோபால் சக்தி ஏஜென்சி.
11/248 சாஸ்திரிரோடு கோவை: போன்-35963-35976

ஸ்ரீமதி எஸ். வசந்தா அம்மாள்,
199, விவேகானந்தா நகர், ராம் நகர், கோவை-9, போன்:34042

ஸ்ரீ எஸ்.வி.எஸ்.நடராஜன் & Son
71/1 துவிபுரம் மெயின்ரோடு, போன்:21598,
57 கணேஷ் நகர் தூத்துக்குடி- போன் 22298.

## ஸ்ரீநாமகிரி டிராவெல் சர்வீஸ்

கங்கா-காவேரி இல்லம்.34 ஏ/2 அக்ரஹாரம் மேலசிந்தாமணி,
திருச்சிராப்பள்ளி போன்:24823

# மழபாடி

வடக்கு நோக்கித் திரும்பி ஓடுகின்ற கொள்ளிடக் கரை. கோபுரத்தின் பின்புறத்திலிருந்து, மாலைக் கதிரவன் ஒளிப் பிரபையாகப் பரவியிருக்க, பசுஞ் சோலையும் நெடிய கோபுரமும், முன்வாயுள்ள கீற்றுக் கூரைகளும் ஏதோ ஓர் ஓவியர் தீட்டிய வண்ணச்சித்திரம் போலத் தோன்றுகிறது. ஆற்றில் தண்ணீர் ஓடவில்லையானாலும் மணல் பரப்பும், தூரத்தில் நீல நிறத்தில் மெல்லிய அலைதவழும் நீரும் அக்கரையில் பச்சிள மரங்களும் கண்களைக் குளிர்விக்கின்றன. இதுதான் திருவையாற்றுக்கு நாலைந்து கிலோ மீட்டர் தூரத்தில் இருக்கும் மழபாடி க்ஷேத்திரம்.

''மழபாடி மன்னும் மணாளன்தானே'' என்று திருமழபாடியுள் குடி கொண்ட மாணிக்கமான சிவ பெருமானை, அண்டத்துக் கப்பாலாய் நின்றவனை, உவகையோடு இன்னருள்கள் செய்தவனைத் திரும்பத் திரும்பப் பாடுகிறார் அப்பர் பெருமான்.

'வரத்தையே கொடுக்கும் மழபாடியுள் வள்ளலே' என்று சம்பந்தர் நெகிழ்ந்து பாடிய திருமழபாடியைப் பார்க்கும்போது ''அடாடா! கோவில் கட்டி வணங்க நமது முன்னோர் எத்தனை அழகான இடங்களைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்!'' என்று வியக்காமல் இருக்க முடியாது. நீர் நிலைகள் உள்ள இடமெல்லாம் நீர்மலி வேணியனுக்குக் கோவில் எடுத்துக் கும்பிட்டிருக்கிறார்கள்.

திருமழபாடி, சுந்தரர் பெருமான் உருகி உருகிப் பாடிய தலம். பெரிய புராணத்தில்

குணங்கொள் அருளின் திறம் போற்றிக்
  கொண்ட புளகத் துடனுருகிப்
புணர்ந்த இசையால் திருப்பதிகம்
  பொன்னார்மேனி என்றெடுத்து
'அன்னே உன்னையல்லால் யான்
  ஆரை நினைக்கேன்'......

— என்று சுந்தரமூர்த்தி நாயனார் வழிபட்டதையும் பதிகம் பாடியதையும் விரிவாகச் சொல்கிறார் சேக்கிழார். ''மழபாடி வர மறந்தாயோ?'' என்று ஈசன் தாமே சுந்தரரைக் கேட்டு அழைத்த தலமல்லவா!

மழவர்கள் இங்கே பாடி அமைத்திருந்ததால் மழவர்பாடி என்று பெயர் வந்தது என்று வரலாறு கூறுகிறது. ஈசன் கையில் மழுவேந்தி ஆடிய தலமாதலால் மழுவாடி மழபாடி ஆயிற்று என்று தல புராணம் கூறுகிறது.

ஞானசம்பந்தரும் ''கையிலேந்திய மழுவினான் உறை மழபாடி'' என்றுதான் பாடுகிறார். ''வார் பொழில் சூழ் மழபாடி மருந்தினை'' என்று

## ஓம் என்று

## சொல்லுவோம்!



# …உறையும் மருத்துவன்!

அவர் பாடியிருப்பதாலோ என்னவோ, கோபுர வாசலில் ''வைத்திய நாத ஸ்வாமி'' என்று எழுதப் பட்டிருக்கிறது. பிறவிப் பிணியைத் தீர்க்கும் வைத்தியர்தானே! கோவி லில் உடனுறையும் அம் பிகையின் நாமம் பாலாம் பிகை.

''வானகஞ்சேர் மழ பாடி வயிரத்தூணே'' என்று அப்பர் பெருமான் பாடுவ தால் ஈசனார்க்கு 'வஜ்ரதம் பேசுவரர்' என்று பெயர்.

தேவலோகத்தி லிருந்து புருஷாமிருகம் வந்து பூஜித்த தலம். மார்க் கண்டேயர், வசிஷ்டர், அகத்தியர் முதலிய ரிஷிகள் வழிபட்ட தலம். ஈசன் இந்தத் தலத்தில் தம் அன்புக்குரியவரான நந்தி கேசுவரருக்குத் திருமணம் செய்து பார்த்து மகிழ்ந்தா ராம். இப்போதும் ஆண்டு தோறும் பங்குனி மாதம் புனர்பூச நன்னாளில் நந்தி கேசுவரருக்கும், சுயம் பிர பாதேவிக்கும் திருக் கல்யாண உற்சவம் நடை பெறுகிறது. திருவையாற்றி லிருந்து மாப்பிள்ளை அழைப்பு நடை பெறு மாம்; மழபாடியில் திருக் கல்யாணம் நடைபெறு மாம். மாசி மாதத்தில் நடைபெறும் பிரும்மோத் ஸவம் மிகவும் விமரிசை யாக நடக்குமாம்.

சாயரக்ஷை நடக்கிறது. மணிகளின் ஒலியும், நாதஸ் வர இசையும் தவில் முழக் கமும் நமது உடலிலும் உள்ளத்திலும் அதிர்வு களை உண்டாக்குகின்றன. கோபுர வாசலிலிருந்து ஓடிச் சென்று வழிபடுகி றோம். அலங்கார தீப வரி சைகளால் ஈசனுக்குத் தீபா ராதனை நடக்கும் போது, மழபாடி மன்னும் மணாளனாரைக் கண்குளிரத் தரிசனம் செய்கிறோம். மழபாடியைப் பிரதோஷ காலத்தில் தரிசனம் செய்யக் கிடைத்த பேரருளை எண்ணி விம்மிதமடைகிறோம். பாலாம்பிகை சந்நிதியில் ஓதுவார் அபிராமி அந்தாதி பாடுகிறார். ஏகாந்தச் சூழலில், விளக்கொளியில் அம்பாள் நம் மனத்தைக் கட்டிப் போடுகிறாள்.

தரிசனம் முடிந்து வலம் வருகிறோம். ஸ்தல விருக்ஷமான பனை, பிராகாரத்தில் ஓங்கி வளர்ந்திருக்கிறது. சுந்தரர் 'மின்னீர் கொன்றை யணிந்தவனே' என்று பாடியதை மெய்ப்பிக்கச் சில கொன்றை மரங்களும் நந்தவனத்தில் இருக்கின்றன.

இந்தத் தலத்தில் நவகிரகங்களுக்குச் சந்நிதி கிடையாது என்பது ஒரு முக்கியமான செய்தி. ஆக, இது நவ கிரக வழிபாடு தொடங்குவதற்கு முன்பே கட்டப் பட்ட பழமையான கோவில் என்பது தெரி கிறது.

கமலா ராஜன்

இந்த ஊரில் ஓர் அற்புதம் நிகழ்ந்திருப்ப தாகக் கூறுகிறார்கள். கூத்தூர் வெங்கடசுப்ரமண்ய தீக்ஷிதர், கொள்ளிடம் தாண்டிச் சென்று, ஊர் திரும் பும் போது கொள்ளிடத்து மணலில் நடந்து வந் திருக்கிறார். நடுக்கோடையாதலால் அனல் காற்று வீச, நாவறண்டு, தள்ளாடி நீரைத் தேடியிருக் கிறார். அப்போது திருமழபாடி கோவில் கோபுரம் தெரிய, தன் தாகவிடாயையும் மறந்து ஈசனை மனம் ஒன்றித் துதித்திருக்கிறார். அப்போது ''மண லைத் தோண்டு'' என்ற கட்டளை காதில் விழுந் தது. தீக்ஷிதர் கையால் மணலைத் தள்ள நீர் ஊற்றி லிருந்து தண்ணீர் பெருகியது. தாகம் தீர்ந்து அருள் வெள்ளத்தில் மூழ்கி ஊர் திரும்பிய வெங்கட சுப்ரமண்ய தீக்ஷிதர் தமக்கு நீர் அளித்துக் காத்த வெள்ள நீர்ச்சடையனாரிடம் அன்பு மிகுந்து, மாசி மகப் பெருவிழா நடக்கும்போது, பத்து நாளும் வேத பாராயணம் செய்வாராம்.

அவருடைய குடும்பத்தினரால் நூற்றைம்பது ஆண்டு களாகத் தொடர்ந்து மாசிமக வேதபாராயணம் நடந்து வரு வது ஓர் அரிய செய்தி. சில காலம் இந்த வேத பாராயணப் பணியை வீட்டிலிருந்தே செய்து வந்தார்களாம். காஞ்சி பெரியவர்கள் ஆசியுடன் மறுபடியும் 1987 ஆம் ஆண்டி லிருந்து மழபாடியிலேயே வேதபாராயணம் நடத்தி வரு கிறார்கள்.

புகழ் பெற்ற எந்த ஆலயத்துக்கும் சளைக்காத கம்பீரக் கலையழகு திருமழபாடியிலும் திகழ்கிறது. நாளெல்லாம் பார்த்து மகிழலாம். உள்ளே புகைப்படங்கள் எடுக்க சிறப்பு அனுமதி தேவை. எனவே மனப்படங்கள் பிடிப்பதுடன் திருப்தி கொள்கிறோம்.

மார்க்கண்டேய முனிவருக்கு வைகாசி விசாகத்தன்று மழுவேந்தி நாட்டியமாடிக் காட்டிய பெருமான் நமது இதயங் களிலும் நர்த்தனம் புரியும்போது, புகைப்படங்கள் எதற்கு?

கோபுரம் படம் : கோபிநாத்

● எம். மோகனப்பிரியன், திருவிடைமருதூர்.

? அ.தி.மு.க. - காங்கிரஸ் கூட்டு உறுதிதானா?

! இந்த அ.தி.மு.க. - காங்கிரஸ் கூட்டணி ரொம்ப மர்மமுங்க. போஃபர்ஸ் மாதிரி! வரும்னும் சொல்ல முடியலை; வராதுன்னு நினைக்கவும் முடியலை!

● பிரசன்னகுமார், குடந்தை.

? எழுத்தாளர்களுள் முற்போக்கு, பிற்போக்கு; பழமை, புதுமை, தமிழன், அல்லாதவன் என்றெல்லாம் பிரிப்பது சரிதானா?

! இந்த லேபிள்களையெல்லாம் வாசகர்கள் ஒட்டறதாத் தெரியலை. எழுத்தாளர்களேதான் ஒருத்தருக்கொருத்தர் ஒட்டிக்கிறாங்க!

● பிரபல்யா, ஈரோடு.

? எத்தனையோ இன்னல்களுக்கிடையில் மூன்றாண்டு ஆட்சி செய்து முடித்திருக்கும் ஜெயலலிதா பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

! எத்தனையோ இன்னல்களுக்கிடையில் இந்த மூன்றாண்டு காலத்தை மூச்சைப் பிடித்துக் கொண்டு ஓட்டியிருக்கோமே என்று நினைக்கிறேன்.



* சிந்தனையா? சினிமாவா?



* நினைவிருக்கா?

**ஜெ. புகழுக்குக் காரணம் சிந்தனைத் திறனா? சினிமா திறனா?**

● சா. ரமேஷ் பாபு, லால்குடி.

? மன்மோகன் தேசாய் பற்றி....?

! டைரக்டர் மன் மோகன் தேசாய் இல்லை என்றால் அமிதாப்பச்சன் ஏது?

● வீ. கணேசமூர்த்தி, பசுவந்தனை.

? மக்களும் அரசியல்வாதிகளும் கக்கன்ஜியை நினைவு வைத்திருக்கிறார்களா?

! காந்திஜியையே மறந்துட்டாங்க; கக்கன்ஜியையா?... ஹூம்...

● தி. சுரேஷ், காரைக்குடி.

? ஜெயலலிதாவின் புகழுக்குக் காரணம், சிந்தனைத் திறனா? சினிமா திறனா?

! பேஷ்! தமிழக அமைச்சர்கள் பங்கேற்கச் சரியான பட்டிமன்றத் தலைப்பு!

● பொன்குமார், சேலம்.

? வடநாட்டில் பல பிரச்னைகளைத் தீர்த்து வைக்கும் மூப்பனார் ஏன் தமிழ் நாட்டுக் காங்கிரஸ் பிரச்னைகளைக் கண்டு கொள்வதில்லை?

! இங்கேதான் அவரையே ஒரு பிரச்னையாக்குகிறார்களே!

● தென்னூர் யாதவன், திருச்சி.

? ஜெயகாந்தனுக்கு மணி விழாவாமே?

! நிறைய வாசகர்களை ஈர்த்தவருக்கு நம் மனம் நிறைந்த வாழ்த்துக்கள். இலக்கியப் பாதையில் ஒரு திருப்புமுனை ஏற்படுத்த ஒவ்வொரு காலகட்டத்தில் ஒவ்வொருவர் தோன்றுகிறார்கள். அப்படி புதுப்பாதை வகுத்தவர்களில் ஒருவர்.

● பால. கிருஷ்ணமூர்த்தி, மருங்கூர்.

? ஆர்.எம்.வீ. பற்றித் தங்கள் கருத்து?

! அடக்கம் தேவைதான். அதற்காக அடிமையாகவா மாறுவது!

● அ.சோ. விசுவநாதன், காட்பாடி.

? ரேஷன் கார்டு போல சேஷன் கார்டை அடகு வைத்து விடுவார்கள் என்று தலையங்கத்தில் குறிப்பிடப்பட்டுள்ளதே? அடையாள அட்டையால் பிறருக்கு என்ன லாபம்?

! நமது அரசியல்வாதிகளின் 'ஆற்றலை'க் குறைத்து மதிப்பிடுகிறீர்கள்.

● வைத்யா, திருவெண்ணெய்நல்லூர். ❑

? வருமான வரி விலக்கு ரூ. 35,000 க்கு உயர்த்தப்பட்டது குறித்து?



* கண்டு கொள்ளாதவர்!



* மணிவிழா

! இதனால் பலரும் மகிழ்ந்து போயிருக்கிறார்கள். என்னைக் கேட்டால் வருவாய் வரம்பைக் குறைத்து, வரி விகிதத்தையும் கணிசமாகக் குறைக்க வேண்டும் என்பேன். யாருக்கும் ஏமாற்றத் தோன்றாது. பலருக்கும் வருமான வரி செலுத்தி நாட்டின் அபிவிருத்திப் பணிகளில் பங்கேற்ற திருப்தி கிடைக்கும். வருமான வரி செலுத்துவதை ஒரு கௌரவமாகக் கருதும் நிலை வர வேண்டும். இப்போதோ விலைவாசிகள் ஏற்கெனவே உயர்ந்து விட்டதால் இச்சலுகையால் ஒரு பயனுமில்லை!

● அ. ராமச்சந்திரன், பெசண்ட் நகர்.

*? அண்மையில் தங்களைக் கொதிப்படையச் செய்த சம்பவம்?*

! 1985 ல் நமது பாதுகாப்பு அமைச்சகம் பிரான்ஸ் தேசத்திலிருந்து 2500 பாராசூட்களை ஏழேகால் கோடி ரூபாய் கொடுத்து வாங்கியிருக்கிறது. அத்தனையும் ஓட்டை! ஒன்றைக் கூடப் பயன்படுத்த முடியலை! 'எப்படி இந்த இமாலய மோசடி நடந்தது?' என்று ஆய்ந்து பார்க்குமாறு பொதுத் தணிக்கை குழு உத்தரவிட்டது. அதையும் லட்சியம் பண்ணாமல் பாதுகாப்பு அமைச்சகம் ஒன்பது ஆண்டுகளாகக் குறட்டை விடுகிறது. இப்போது தணிக்கைக் குழு, அந்த மோசடி, இந்தத் தாமதம் இரண்டையும் விசாரிக்குமாறு தாக்கீது விடுத்துள்ளது! உருப்படுமா இந்த நாடு!


* அடக்கம் தேவைதான்....


* முதல் பரிசு!

●பாக்கியலெட்சுமி, கீழக்கிருஷ்ணன்புதூர்.

*? மனிதன் எப்போது மனிதனாக இருக்கிறான்? எப்போது மிருகமாகிறான்?*

! வனங்கள், பல்வேறு விலங்கினங்கள் ஆகியவற்றை அழிவிலிருந்து காப்பாற்ற வேண்டும் என்று எண்ணும்போது மனிதனாக இருக்கிறான். இப்போது பிரிட்டனில் நடந்துள்ளது போல, பேராசை கொண்டு மீன்களை ஏகமாக அறுவடை செய்ய, கடல் பறவைகளுக்கு மீன்களே கிடைக்காமல் போய் அவை கூட்டம் கூட்டமாக உயிரை விடும் போது, மனிதன் மிருகத்தை விடக் கேவலமாகிறான்!

● எல்.ஆர். விஜயகுமார், சென்னை.

*? கற்றுலா பொருட்காட்சியில் சசிகலாவுக்கு முதல் பரிசு கிடைத்திருக்கிறதே?*

! காளான் வளர்ப்பில் தானே! செயல்முறை விளக்கம் கருதித்தானே! ஓ.கே.!

● கவி. கண்ணன், சீர்காழி.

*? கப்புடு விமர்சக சார்வபௌமா விருது பெற்றது பற்றி?*

! 'விமர்சன சக்கரவர்த்தி' என்றே கொடுத்திருக்கலாம். 'பளிச்'சென்று இருந்திருக்கும். 'சார்வ பௌமான்னா என்ன?' என்று


* சார்வ பௌமா!


* ஏங்க வைத்து.....

பலரும் கேட்டுக் கொண்டிருப்பது தவிர்க்கப்பட்டிருக்கும். 'சகலத்துக்கும் அதிபதி' என்று அர்த்தத்தைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டியிருக்காது.

● ஹஜ் ப்ரியன், ரெட்ஹில்ஸ்.

*? சமீபத்தில் தங்களை நெகிழ வைத்த சம்பவம்?*

! எனது இனிய நண்பர் பி.என். சுந்தரேசனின் மறைவு. ஹிந்து பத்திரிகையில் நீண்ட காலம் கிரிக்கெட் விமர்சகராக இருந்து ஓய்வு பெற்ற பிறகு, முன்னிலும் சுறுசுறுப்பானார். அகில இந்தியாவிலும் பல்வேறு மொழிப் பத்திரிகைகள் (கல்கி உள்பட) அவ்வப்போது அவரது கிரிக்கெட் தொடர்பான கட்டுரைகளைக் கேட்டுப் பெற்று மொழி மாற்றம் செய்து பிரசுரித்தன. இதனால் விளையாட்டுத் துறையில் மட்டுமின்றி பத்திரிகை உலகிலும் ஏராள நண்பர்கள். 'சுருதி' மாத இதழுடன் தொடர்பு கொண்டதால் கலை உலகிலும் அன்பர்கள். திருப்புகழ் பஜனையில் தீவிரப் பற்றுக் கொண்டிருந்ததால் ஆன்மீக அனுபவத்துக்காக அணுகியவர்கள் என்று எல்லோரையும் ஏங்க வைத்து விட்டுப் பிரிந்து போய் விட்டார்.

☐ ரூ. 25 பரிசு பெறுபவர்
வைத்யா,
9, சன்னதி வீதி,
திருவெண்ணெய்நல்லூர் - 607 203.

## வட்டமேஜை




# அட்டையில் அழகு; கட்டுரையில் கிள்ளு!

◆ "சேஷனுக்கு ஆப்பு" தலையங்கம் படித்தேன். ஆணை எதுவாயினும் அதை நிறைவேற்ற வேண்டியது அரசு என்பதால், அதையும் கலந்தாலோசித்துச் செயல்பட வேண்டுமே அன்றி, செருக்குக்கு இடந்தரலாகாது என்றும், மனிதன் தவறு செய்யக் கூடியவன், எனவே சேஷன் தவறேதும் செய்தால் அது நாட்டை பாதிக்கும் என்றும் ஒளிவு மறைவு இன்றி மிகத் தெளிவாகவே கூறியுள்ளீர்கள். ஆனால் சேஷனிடம் இந்தக் குறைகள் எடுபடுமா என்பது தான் கேள்வி.

சென்னை - 14,
பொ. வஜ்ரவேலு.

◆ படுமோசமாகி விட்ட அரசியலைச் சீர்படுத்த சேஷன் சொல்லிய சீர்திருத்தங்கள் அவசியமே. அவற்றை அரசியல் வாதிகள் ஏற்பார்கள் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. அதிரடி வைத்தியமாகச் சில அதிரடி நடவடிக்கைகளும் அவசியந்தான். கருணை காட்டுதல், அரவணைத்துச் செல்லுதல் என்ற பேச்சுக்கும் இடமில்லை. சட்டபூர்வமானதல்ல என்பதால் தேர்தலில் நீதி நெறி தேவையில்லை என்று ஆகிவிடுமா? எப்படியாவது பதவியில் ஒட்டிக் கொண்டிருக்கட்டும் என்பதும் சரியல்ல. கௌரவர்கள்தான் ஜெயிப்பார்கள் என்றால் சேஷனுக்குப் பதவிதான் எதற்கு?

மதுரை - 1,
சு. பாலசுப்ரமணியம்.

◆ 'காஷ்மீர் : கிளிண்டன் தலையீடு தேவையா?' தலைப்பிலான கட்டுரை படித்தேன். நமது இந்தியாவுக்கு எதிராகக் காஷ்மீர் பிரச்னையில் பாரபட்சமாக நடந்து கொள்ளும் கிளிண்டன் அரசின் செயல்பாடு குறித்து நமது முன்னாள் வெளியுறவுச் செயலர் கே.பி.எஸ். மேனன் கூறியிருக்கும் கருத்துக்கள் அனைத்தும் அட்சர லட்சம் பெறும்.

மொரட்டுப்பாளையம்,
இராஜேஸ்வரன்.

◆ அட்டையில் கிளிண்டனை அழகாகப் போட்டு விட்டு, கட்டுரையில் அழுத்தமாகக் கிள்ளியிருக்கிறீர்களே!

சேலம் - 2, சூர்யநிலா.

◆ வளம் கொழிக்கும் மினி இந்தியா (இந்தோனேஷியா) பற்றிய செய்திகளை ரத்தினச் சுருக்கமாகப் படம் பிடித்துக் காட்டியிருந்த பாங்கு, மெச்சும் படி இருந்தது.

செம்பட்டி, சோ. இராமு.

◆ 'வேசல் கார்னர்' - மிகவும் பயனுள்ள அரிய பொக்கிஷமாகப் பாதுகாக்க வேண்டிய பகுதி; ஆரோக்கியமான வாழ்விற்கு உறுதுணையாக நிற்கும் பகுதி.

திருச்சி - 8, மா. நளினி.

◆ பட்ஜெட் பஜார்! மதியின் கார்ட்டூன் நெத்தியடி. கற்பனை தான் என்றாலும் நிஜமாகிற சாத்தியக்கூறுகள் இருப்பதாகவே தோன்றுகிறது!

திருச்சி - 4,
தாயு. செந்தில்குமார்.

◆ சத்யாவின் 'டிவிட்டின் இல்லென்னா எப்படி?' சிரிப்பிற்குப் பதில், நிறையவே சிந்திக்க வைத்தது. இன்றைய அரசு அலுவலகங்களின் அவலங்களை நன்றாகவே பிட்டுப் பிட்டு வைத்திருக்கிறார்.

சேலம் - 1, கே. ராஜுபாலு.

◆ திருவாரூர் பாபுவின் 'நிறுத்தம்' சிறுகதை இன்றைய சூழ்நிலைகளை அப்பட்டமாய்க் காட்டியது; அருமையான கதை!

திருச்சி - 17,
தென்னூர் யாதவன்.

◆ கலைஞரின் அடுத்த போர்வாள் ஆகும் தகுதி தற்போது தி.மு.க.வில் யாருக்கு இருக்கிறது என்ற கேள்விக்கு, தராசு சொன்ன பதில் இருக்கே... அடடா! 'நத்துல ஒரு வார்த்தை'.

மணலூர்பேட்டை, கே. பாரதி.

◆ இன்று நாட்டை அலைக் கழிக்கும் பல பிரச்னைகளில் பெண்ணுக்கு அநீதி என்பதும் ஒன்று. இதற்கு ஆண், பெண் இருபாலரின் மன மாற்றத்தால் தீர்வு காண முயன்றிருக்கிறார் 'அவரவர் உலகம்' கதாசிரியர். பாராட்டுக்கள்.

தஞ்சாவூர் - 8,
எஸ். இராஜகோபாலன்.

◆ மார்ச் 6 இதழ் அருள்வாக்கில், "கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டு பிடித்ததை விட ஹிந்துக்களின் வேதங்களை நாம் கண்டு பிடித்ததுதான் பெரிய டிஸ்கவரி என்று கூத்தாடிய வெள்ளைக்காரர் உண்டு" என்ற மூல வாசகம், "கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டு பிடித்ததுதான் பெரிய டிஸ்கவரி என்று கூத்தாடிய வெள்ளைக்காரர் உண்டு" என்பதாகத் தவறாக அச்சாகியுள்ளது.

சென்னை - 81, ரா. கணபதி.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

# ஃபாரெக்ஸ்

## உணவு விழா



ஃபாரெக்ஸ் அணிவரிசை உங்கள் குழந்தையின் துரிதமான முழு வளர்ச்சிக்குத் தேவையான சத்துக்களை அளிக்கிறது.

4-வது மாதம் முதல், பாலுடன் கோதுமை தானியம் கலந்த ஃபாரெக்ஸ் அளித்து உங்கள் குழந்தையின் திட உணவை ஆரம்பியுங்கள்.

5-வது மாதம் முதல் குழந்தைக்கு ஃபாரெக்ஸ் வெஜ் அளியுங்கள். கோதுமை, பால்,




வைட்டமின் செறிந்த தக்காளி, கேரட் மற்றும் பயத்தம் பருப்பின் நற்பலன்கள் அனைத்தும் இதில் அடங்கியுள்ளது.

5-வது மாதம் முதல், கோதுமை, பால் மற்றும் வாழைப்பழம், மாம்பழம், ஆப்பிள் செறிந்த ஃபாரெக்ஸ் ஃப்ரூட்ஸ் கொடுத்திடுங்கள்.



# வளரும் குழந்தைகளுக்கு

6-வது மாதம் முதல் குழந்தைக்கு அளியுங்கள் ஃபாரெக்ஸ் எக். இதில் எளிதில் சீரணிக்கக் கூடிய முட்டை மற்றும் பாலின் நன்மைகள் அடங்கி—யுள்ளன.








**ஃபாரெக்ஸ்**
சுவையுடன் வளரும் வழி.

முக்கிய அறிவிப்பு: தாய்ப்பால் உங்கள் குழந்தைக்குச் சிறந்தது. நான்கு மாதங்கள் முதல், உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால் மட்டுமின்றி, தானிய உணவையும் கொடுங்கள்.

Gx. 931.93.Tm